Registered No. M. 1500.

# நவசக்தி

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளிநாடு-வருடசந்தா | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 [illegible]
சில்லறை விளம்பரம் 1 அங். [illegible]
முன்பணமின்றி விளம்பரம்
செய்யப்படமாட்டாது.

சிலம்பு கஉ | பிரசோற்பத்திஸு கார்த்திகைமீ கஎஉ (2—12—31) புதன்கிழமை | பரல் எ



## முருகன்
# அருள் வேட்டல்

### பழமுதிர்சோலை

கண்ணிலே காண்பன காதிலே கேட்பன கந்தநின்றன்
எண்ணமா நெஞ்சில் இயங்கிடும் வாழ்வினை ஈந்தருள்க
விண்ணிலே முட்டி விரிநிலம் பாய்ந்து விளங்கிநின்று
பண்ணிலே மூழ்கும் பழமுதிர் சோலைப் பரம்பரனே. க

உள்ள மிருக்கும் உனைபுணர் காதல் உறுதிகொள்ளாக்
கள்ள வினையேன் கசிவிலாப் பாவி கருணைபுரி
துள்ளு மறிமான் சுழிப்புன லஞ்சுஞ் சுனையினிலே
பள்ளு முழங்கும் பழமுதிர் சோலைப் பரம்பரனே. உ

கற்ற கலைகள் களிபெருஞ் செல்வங் கடைவருமோ
சற்றும் அழியாக் கலைகளுஞ் செல்வமுந் தந்தருள்வாய்
வெற்றி விறலியர் யாழின் விருந்துணு வேழினம்
பற்றினைக் கொண்ட பழமுதிர் சோலைப் பரம்பரனே. ங

வாழ்கநின் வேன்மயில் வாழ்கவென் றேதினம் வாழ்த்துமன்பர்க்
கூழ்வலி யின்மை உறுதியென் றுண்மை யுணர்ந்துகொண்டேன்
எழ்கதிர் மூழ்கி இழிபுன லாட இயற்கைநல்கிப்
பாழ்தரு நோய்தீர் பழமுதிர் சோலைப் பரம்பரனே. ச

ஆறு முகமும் அருட்டாயர் நோக்கும் அயில்மயிலின்
வீறுங் கொடியும் விழிமுன் விளங்கின் வினையுமுண்டோ
தேறு பழம்பொழி சாறிழிந் தோடத் திரளருவி
பாறும் இடர்கள் பழமுதிர் சோலைப் பரம்பரனே. ரு

மண்புனல் தீவளி வான்சுடர் யாவுநின் வாழியுடல்
திண்ணுயிர் நீயெனில் உண்மையில் ஐயந் திகழலென்னே
வண்டுகள் யாழ்செய் மலரணி வல்லி வனப்பொழுகும்
பண்புடை ஞானப் பழமுதிர் சோலைப் பரம்பரனே. சு

மலைபொழில் பூக்கள் மதிகடல் சேய்கள் மயிலனையார்
அலைவழி பாடல் அழகுநின் எண்ணம் அறிவுறுத்தும்
சிலைநுதல் வேடச் சிறுமியர் சேர்ந்த செழியதந்தீம்
பலகுவ டாகும் பழமுதிர் சோலைப் பரம்பரனே. எ

ஆண்டவ நின்றன் அறிகுறி யாகிய ஆலயத்துள்
தீண்டல்தீண் டாமை சிறத்தலால் அன்பர்கள் செல்வதெங்கே
வேண்டல்வேண் டாமை கடந்தவர் வாழ்வும் விரதமுஞ்சூழ்
பாண்டிய நாட்டுப் பழமுதிர் சோலைப் பரம்பரனே. அ

சாதிநோய் பேய்மதம் சார்தரு கோயிலுள் சண்முகநின்
சோதி விளங்குமோ சூர்தடிந் தாண்ட சுடர்மணியே
நீதியே என்று நினையடி யார்கள் நிறைந்துநின்று
பாதமே போற்றும் பழமுதிர் சோலைப் பரம்பரனே. கூ

எல்லாரும் ஓருயிர் அவ்வுயிர் நீயென்ற ஆண்டவனே
பொல்லாத சாதி புகுந்திவண் செய்யிடர் போக்கியருள்
சொல்லாத மோனச் சுவையிலே தேக்குஞ் சுகர்களிலே
பல்லோர்க ளுட்கொள் பழமுதிர் சோலைப் பரம்பரனே. கO

திரு. வி. கலியாணசுந்தரன்.

# "நவசக்தி" ஆசிரியர் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் எழுதிய நூல்கள்

## மனிதவாழ்க்கையும் காந்தியடிகளும்

இந்நூல் காந்தியடிகள் வரலாற்றைக் கூறுவதன்று. இஃது அவர் வரலாற்றிலுள்ள நுட்பங்கள் மனிதவாழ்க்கையோடியைந்து நிற்கும் முறையைக் குறிப்பது; அதாவது காந்தீயத்தை அறிவுறுத்துவது; பகவத்கீதை திருக்குறள் என்னும் இரண்டு நூல்களின் சாரமாக அமைந்துள்ளது.

இந்நூற்கண் விளங்கும் முதற்பொருள் மூன்று, (க) மனிதன் எவன் என்பது (உ) ஒருவன் மனிதனாக எத்தகை வாழ்க்கை நடாத்தல் வேண்டுமென்பது (ங) மனித வாழ்க்கைக்கு இலக்கியர் மகாத்மாகாந்தி என்பது.

இந்நூற்கண் பெண்மக்கட்குரிய பொருள், ஆண்மக்கட்குரிய பொருள், அரசியலுக்குரிய பொருள், சத்தியாக்கிரகப் பொருள், சமயப் பொருள் முதலிய பல பொருள்கள் காணலாம். இல்லறம், தியாகம், அஹிம்சை, சுயராஜ்யம், சத்தியாக்கிரகம், சமயவாழ்வு முதலியன வாசிப்போர்க் கின்பூட்டுவன. சமயவாழ்வில் சமரச சன்மார்க்க நுட்பம் மிக விளக்கமாக ஓதப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு தலைப்பின் கீழும் அடிகளின் அறவுரைகளைத் திரட்டி அவைகளை முறைப்படுத்தியுள்ள ஒழுங்கும் பொருளும் வாசிப்போர்க்கு இன்பூட்டுவதோடு சீரிய வாழ்வு நடாத்துமாறு அவரை அவைகள் தூண்டும். சன்மார்க்கத் துறைகள் பல இந்நூற்கண் பொலிதல் காணலாம். மூன்றாம் பதிப்பு. விலை ரூபா 2-8-0.

## பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை

இந்நூல், பெண்மை, தாய்மை, இறைமை என்னும் முப்பொருளை முதலாக உடையது. இம்மூன்றும் முறையே நூலின் உடல் உள்ளம் உயிராக அமைந்திருக்கின்றன. இம்மூன்று முதலினின்றும் கிளம்பிய கவடுகளும் கோடுகளும் நூலின் பிற உறுப்புக்களென்க.

வேத காலத்துப் பெண்மக்கள் நிலை, பழந்தமிழ் நாட்டுப் பெண்மக்கள் நிலை, அவர்கள் உரிமை, இடைக்காலத்தில் பெண்மக்கட்கு நேர்ந்த சிறுமை, அச்சிறுமை போக்குதற்குரிய வழிகள் முதலியன இந்நூலில் ஆராய்ச்சி முறையில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. பூதபௌதிக நூல்களை யொட்டிப் பெண்ணின் பெருமை நிறுவிக் காட்டப்பட்டிருக்கிறது.

இயற்கை வாழ்வு, செயற்கைத் தாழ்வு, உடலோம்பல் முதலிய நறும்பொருள்கள் நூலின் ஊடே ஊடே பெய்யப்பட்டிருக்கின்றன. கூடாவொழுக்கம், இளமைமணம், பதியிலாமை முதலியவற்றான் விளையுங் கேடுகள் நூற்கண் உள்ளங்கை நெல்லிக்கனி போல் எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. விலை ரூபா 2.

## தமிழ்த் தென்றல்

தமிழ் மொழியில் வீரச்சுவையுண்டு என்பதை இந்நூலிற் காணலாம். இயற்கை வருணனைகள் இயற்கைப்படம்போலக் காட்சியளிக்கும். மேடைகளில் நயம்படத் தமிழில் பேச முயல்வோர்க்கும், தமிழ்க் கட்டுரைகள் வரைவோர்க்கும் இந்நூல் பெருந்துணை செய்யும். ஒவ்வொரு தமிழ் மாணுக்கர் கையிலும் இந்நூலிருத்தல் வேண்டும். இந்நூலைப் படிப்போர்க்குத் தேசபக்தியும், உரிமையில் வேட்கையும் வீறிட்டெழும் என்பது உறுதி.

தமிழ்நாட்டுப் பண்டைப் பெருமை, தாய்மொழிப்பற்று, பிறப்புரிமை, உரிமை வேட்கை, தேசபக்தி, சுயராஜ்யப் பேறு, ஒற்றுமை, சகோதர நேயம், ஊக்கம், காந்தியடிகள் அறம், ஒத்துழையா இயக்கச் சிறப்பு, அவ்வியக்க முறைகளால் நாட்டுக்குள்ள நலன் முதலிய பொருள்கள் இந்நூற்கண் ஆங்காங்கே மிளிர்கின்றன. பெயருக்கேற்ற பொருளை இந்நூலிற் பெறலம். விலை ரூபா 2.

## சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து

இந்நூற்கண் இளமை மாண்பு, அழகின் பெற்றி, இளமையழகோம்பு முறைகள், காவியச் சிறப்பு, ஓவியத்திறன், இசை நுட்பம், நாடக நலன், சமரச சன்மார்க்கமென்னும் அன்பு நெறியே சமயமென்பது, கோயில் சீர்திருத்தம் முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. நாடு மொழி பிறப்பு முதலியவற்றான் வேற்றுமை பாராட்டுவதால், சகோதர நேயத்துக்கு ஊறு நிகழ்தல் தெள்ளத் தெளிய விளக்கப்பட்டிருக்கிறது; சாதி வேற்றுமை, தீண்டாமை, பெண்ணடிமை முதலிய சிறுமைகளின் நீக்கம் நாட்டுக்கு விடுதலை நல்குவது என்று வலியுறுத்தப்பட்டிருக்கிறது; கண்மூடி வழக்க வொழுக்கங்கள் மிக உரமாக மறுக்கப்பட்டிருக்கின்றன; வாழ்விற்குரிய வேறு பல சீர்திருத்தங்களும் குறிக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலின் உள்ளுறை இளைஞருலகிற்கு நல்விருந்தளிக்கு மென்பதில் ஐயமில்லை. விலை அணா 8.

## முருகன் அல்லது அழகு

இஃது இயற்கை அழகை எடுத்துக்கூறும் நூல். இயற்கை அன்னையின் மாண்பை இந்நூற்கண் காணலாம். இந்நூற்கண் முருகன் சொற்பொருள் விளக்கம், அழகினியல், இளமைப்பேறு, இயற்கை மாண்பு, நோன்பு, வழிபாடுகளின் திறம், முருகனடியார் இயல்பு முதலியன ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலை முற்றும் பயில்வோர் உள்ளத்தில், இயற்கை வழிபாட்டில் ஆர்வம், ஒரே கடவுள் ஒரே நெறி என்னும் உறுதி, எவ்வுயிர்க்குந் தீங்கு நினையாப்பேரறம் முதலியன நிலவும். இயற்கை வருணனையும் உரை நடையும் நெஞ்சைக் கவரும். விலை ரூபா 1.

## என் கடன் பணிசெய்து கிடப்பதே

இந்நூலில் பணியின் பெருமை விரிவாக ஓதப்பட்டிருக்கிறது. கடவுள்பணி, சராசரப் பணி, சிறப்பாகத் தேசப்பணி ஆகிய இப்பணிகளை இந்நூலில் காணலாம். இஃதொரு கருமயோக நூல்; காலத்துக்கேற்றது. இரண்டாம் பதிப்பு. விலை அணா 8.

## சைவத்தின் சமரசம்

இந்நூற்கண் சமயத்தின் இயல்பு இஃது என்பதும், எல்லாச்சமயங்களும் ஒரு கடவுளையே பல பெயரால் பல வழியில் போற்றுகின்றன என்பதும், சமயங்கள் பலவாய்க் கிடப்பினும் அவைகள் யாவும் சமரசத்தையே குறிக்கொண்டு நிற்கின்றன என்பதும், அச்சமரசமே சைவமென்பதும், பிறப்பையொட்டி உயர்வு தாழ்வு பாராட்டாமை, கைம்மாறற்ற பணி, பிறர் குற்றம்பொறுத்தல், பாவ மன்னிப்பு முதலியன சைவசமயத்தில் சிறப்பாகவிருக்கின்றன என்பதும், அருள்-கருணை-இரக்கம்-தயை உள்ள விடங்களிலெல்லாம் சைவம்மிளிரும் என்பதும், சைவம் ஒரு சமயம் அன்றென்பதும் பிறவுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. விலை அணா 8.

## சைவத் திறவு

"தென்னாடுடைய சிவனே போற்றி—எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்னும் உரையைப் பீடிகையாகக் கொண்டு எழுதப்பட்டது.

இந்நூலிடை, மாணிக்கவாசகனார் நிலை, திருவண்டப்பகுதி நுட்பம், நினைப்பற நினைத்தலின் விளக்கம், மூவித உடலங்களின் பாகுபாடு, ஒரே கடவுளுண்மை, 'தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறை'' என்பது, இறைக்கும் இயற்கைக்குமுள்ள தொடர்பு, சேய்சிவம் என்பது, சமரசம், இறைவனை யுணரும் வழி, இறைவனது சொரூப தடத்த இயல்புகள், காவியங்களின் இன்றியமையாமை, நம்பிக்கையின் அவசியம், ஆராய்ச்சியின் அளவு, சைவத்திறவுள்ள இடம், கடவுளின் அகண்டாகாரப் படம், "தோடுடைய செவியன்'' என்பதின் உள்ளுறை, ஆண்டவன் பெண் ஆண் வடிவ்மாகவிருக்கும் நுட்பம், தோடு விடை மதி சுடலை முதலியவற்றின் உட்பொருள், கோயில்களின் நோக்கம், தற்காலக் கோயில்கள், சாதிப்பேய், நூல்களுங் கோயில்களே என்பது, தவப்பேறு முதலிய பொருள்கள் சுருங்கிய முறையில் ஆங்காங்கே விளக்கப்பட்டிருக்கின்றன. உருவ வழிபாட்டின் நுட்பமும், இன்றியமையாமையும் விளக்கமாக இந்நூற்கண் ஓதப்பட்டிருக்கின்றன. இந்நூலைப் படிப்போர்க்கு உருவ வழிபாட்டைப் பற்றிய பலதிற ஐயப்பாடுகள் நீங்கும். விலை அணா 8.

## இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்

இஃதொரு சமரச சன்மார்க்க நூல். இந்நூலில் ஷடாந்த இயல், சமரச நுட்பம், சன்மார்க்க விளக்கம் முதலியன மிக விரிவாக எடுத்துக் காட்டப்பட்டிருக்கின்றன.

இராமலிங்க சுவாமிகள் ஷடாந்த சமரச சன்மார்க்கத்தில் நின்று, அருணெறியோம்பி, உயிர்கள் வழிபாடே கடவுள் வழிபாடு என்பதை யுணர்ந்து, சமயவாழ்வு நடாத்திய விதம், அவர் ஆண்டவனை நோக்கிச் செய்த முறையீடு, அமுத அழுகை, அவர் கொண்ட குரு, பொருணூல், வழிபடுகடவுள், அவரடைந்த மரணமிலாப் பெருவாழ்வு, அதற்குரிய முறை முதலியன தெளிவாக இந்நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் காலத்துக்கேற்ற ஒன்று என்பது நூலை முற்றும் வாசிப்போர்க்கு இனிது விளங்கும். இக்காலதேச வர்த்தமானம் வேண்டுஞ் செம்மைச் சீர்திருத்தங்கள் பல இந்நூற்கண் மிளிர்கின்றன. விலை ரூபா 1.

## கடவுள் காட்சியும் தாயுமானாரும்

மன மாசுகளை நல்லறிவால் கழுவி உண்மையில் மூழ்கி நின்ற அநுபூதிமான்களில் ஒருவராகிய தாயுமானார் அருளிச் செய்த "ஐவகை எனும் பூதம்'' என்னும் திருப்பாட்டைப் பீடிகையாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுளது. நூலின் திரண்ட கருத்து மெய்ம்மையில் கடவுள் காட்சி பெறலாமென்பது. கடவுளின் அருட்டன்மையும், படைப்பு முறைகளும், படிகளும், படைப்பின் நோக்கமும், உயிர்களின் கடமையும் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கப்பட்டிருக்கின்றன. விலை அணா 4.

## தமிழ் நூல்களில் பௌத்தம்

வேண்டுவோர் 5 அணா தபால் முத்திரை அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். விலை அணா 4.

நாயன்மார் விலை அணா 3. சைவசமய சாரம் விலை அணா 1.

தமிழ்நாடும் நம்மாழ்வாரும் விலை அணா 4.

இமயமலை அல்லது தியானம் விலை அணா 6.

உரிமை வேட்கை அல்லது நாட்டுப் பாடல் விலை அணா 4.

இந்நூல்கள் எல்லாவற்றையும் ஏககாலத்தில் வாங்குவோருக்குத் தபாற் செலவின்றி, மணியார்டர் கமிஷன் கழித்து வி. பி-யில் அனுப்பப்படும்.

# வேறு பதிப்புகள்

## விநாயகர் பனுவல் திரட்டு

விநாயகக் கடவுள் சம்பந்தமாக ஆன்றோர் அருளிச் செய்துள்ள அரிய பாக்கள், பல நூல்களினின்றும் திரட்டப்பட்டன. பூஜா காலங்களில் ஓதுதற்குரிய சிறந்த நூல். விலை அணா 6

## முருகவேள் பனுவல் திரட்டு

சுப்பிரமணிய பக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

இதில், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரநுபூதி, கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, கந்தர்சஷ்டி கவசம், திருமுருகாற்றுப்படை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், திருப்போரூர் சந்நிதிமுறை, திருத்தணிகை சந்நிதிமுறை, கந்தபுராணம், தணிகைப் புராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கியிருக்கின்றன. இரண்டாம் பதிப்பு. இப்பதிப்பில் முன்னினும் பாக்கள் அதிகமாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. விலை ரூ. 1.

## முருகன் திருவருட்பா

ஸ்ரீமத் - இராமலிங்க சுவாமிகள் அருளிச் செய்தது; திருவருட்பா ஐந்தாந் திருமுறையிலிருப்பது; ஓதுவோர் மனதை அழலிடைப்பட்ட மெழுகென உருகச் செய்வது. விலை அணா 8.

## தேவி தோத்திர மஞ்சரி

தாயுமான சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், குமாரகுருபர சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள், சிவஞான சுவாமிகள், அபிராமிபட்டர் முதலிய ஆன்றோர்கள் அருளிச் செய்த பாடல்களும், சௌந்தரியலகரி, ஆனந்தலகரி, சக்திகவசம் முதலிய பல நூல்களினின்றும் திரட்டி எடுக்கப்பட்ட தேவி தோத்திரங்களும் அடங்கிய அரிய நூல். விலை அணா 4. 5 அணா தபால் முத்திரை அனுப்புவோர்கட்கு ஒரு புத்தகம் அனுப்பப்படும்.

## திருப்போரூர்ச் சந்நிதிமுறைத்திரட்டும், அரும்பதவுரையும்

இதில் அரிய பாக்கள் திரட்டி எடுக்கப்பட்டுள்ளன. அரும் பதங்களுக்கு உரை வரையப்பட்டிருக்கிறது. வேண்டுவோர் விலைக்கு மேல் ஒரு அணா தபால் தலை சேர்த்து அனுப்பினால் புத்தகம் அனுப்பப்படும். விலை; கிளேஸ் அணா 5; ரப் அணா 3.

## கந்தபுராணச் சுருக்கம்

மூலமும் பொழிப்புரையும் விருத்தியும்

இந்நூல் ஸ்ரீமத் - சம்பந்தசரணாலய சுவாமிகளால் சொற்சுவை, பொருட்சுவை, சந்தச்சுவை முதலியன ததும்ப 1000 பாடல்களாகப் பாடப்பட்டது; பரந்து கிடக்கும் பெரிய கந்தபுராணக் கதையை இனிது விளக்குவது. மூலத்திற்கேற்ற பொழிப்புரையும், விருத்தியும் பலநூற் பிரமாணங்களுடனே எழுதப்பட்டுள்ளன. விலை ரூபா 3.

**முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.**

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கஉ | பிரசோற்பத்தி௵ கார்த்திகைமீ களஉ (2—12—31) புதன்கிழமை | பரல் எ

## வியாபாரமும் கைத்தொழிலும்

திரு. எஸ். இராமச்சந்திரன், எம். ஏ.

### டாடா கம்பெனி

நம் மனதிற்கு முதல் முதலில் வந்து நிற்பது ஜாம்ஷெட்பூரிலிருக்கும் 'டாடா' இரும்பு எஃகு தொழில்களே. ஜெ.என். டாடாவும் அவர் சந்ததிகளும் உலகத்திலுள்ள மற்ற அயல்நாட்டார்களுக்கு இந்தியர்களின் திறமையை விளக்கிக் காட்டும் ஒரு பெரும் தீபம் போல் விளங்குகிறார்கள். அவர்களின் விடா முயற்சியும், ஈசுவரனால் அளிக்கப்பட்ட பெரும் தனத்தைச் சரியான வழியில் செலவிடும் இயல்பும், முன் யோஜனையும் வியக்கத்தக்கன. ஒரு தேசத்தின் கைத்தொழில் அபிவிருத்திக்கு நூதன ஆராய்ச்சியின் அத்தியாவசியத்தை அறிந்து "இண்டியன் இன்ஸ்டிட்யூட் ஆப் ஸய்ன்ஸ்" என்னும் பெரும் சோதிப்புச்சாலையை பெங்களூரில்கட்டியிருக்கிறார்கள். மேலும் அயல்நாடுகளுக்குச் சென்று பயிற்சி பெறுவதற்காக உபகாரச் சம்பளம் கொடுத்து அநேக வாலிபர்களை அயல்நாடுகளுக்கனுப்பியுமிருக்கிறார்கள். சுருக்கிச் சொல்லின் ஒரு தேசக்கைத்தொழில் முன்னேற்றத்திற்கு வேண்டிய அத்தியாவசியமான கிரியைகளை யெல்லாம் செய்து காண்பித்திருக்கிறார்கள். ரஸாயன சம்பந்தமுள்ள கைத்தொழில்களில் நாம் சில பயன்களை உத்தேசித்து பக்குவங்கள் செய்கின்ற சமயத்தில், நமக்கு வேண்டாத மற்றும் சில பொருள்கள் வரும். அப்பொருள்களை உபயோகப்படுத்துவதற்கு உபாயங்கள் தேடினால் தான் கைத்தொழில் முன்னேற்றமடையும். ஆகையால் ஒவ்வொரு கைத்தொழிலும் மற்றும் சிற்சில கைத்தொழில்களை நடத்த வேண்டியது அத்தியாவசியமாகும். ஸோடா உப்பு என்று விளங்கும் சாமானைத் தயாரிப்பதில் "மூரியாடிக்" திராவகம் இலவசமாய் கிடைக்கிறது. இரும்பு தயாரிப்பதற்கு "கோக்" என்று சொல்லப்படும சாமான் அவசியம். நிலக்கரியிலிருந்து "கோக்" தயாரிக்கிறார்கள். இப்படித் தயாரிப்பதில் "கோல்தார்" என்னும் பதார்த்தம் கிடைக்கிறது. இதிலிருந்துதான் "கோல்தார் வர்ணங்கள்" என்று அதிவிமரிசையாய் விளம்பரம் செய்யப்படும் அதியற்புதமானவையாகவும் கண்களைக் கவர்கின்றவையாகவும் உள்ள வர்ணங்கள் தயாரிக்கப்படுகின்றன.

ஆகையால் "கோக்" வியாபாரிகளுக்கு, "தார்" அதிக விலையுயர்ந்த இலவச இடைப்பொருள் (By-product) கிடைக்கிறது. இம்முறைகளை அனுசரித்தே "டாடா" கம்பெனியார்கள் கந்தகத்ராவகம் முதலியன செய்கிறார்கள். அநேக அயல்நாட்டார்கள் இரும்பு எஃகு முதலிய சாமான்கள் நம் தேசத்திலேயே தயாரிக்கிறார்கள். சர்க்கரை சுத்தம் செய்தல், தோல் பதப்படுத்தல், நெருப்புப்பெட்டி தயாரித்தல் இவைகள் போன்ற மற்றும் சில கைத்தொழில்கள் அயல் நாட்டார் கையில் சிக்கிக்கொண்டு இருக்கின்றன.

### ஐரோப்பிய யுத்தம்

1914-ம் வருஷம் நடந்தேறிய யுத்தம் நம்தேசத்திற்குப்பெருநன்மையைப்பயந்தது. இந்தியாவின் தினசரித் தேவைகளுக்கே அயல்நாட்டார்களின்மேல்நம்பிக்கை யிருக்கவேண்டியதை அரசாங்கத்தார்களுக்கு நன்கு விளக்கிக் காட்டியது. நெருப்புப் பெட்டிக்குக்கூட "நார்வே" தேசத்தை எதிர் பார்க்கவேண்டியிருந்தது. இப்பொழுதும் ஜப்பானியர்களே நம் தேசத்திற்குத் தேவையான நெருப்புப் பெட்டிகள் தயாரித்தனுப்புகிறார்கள். ஜெர்மனியிலிருந்து கண்ணாடி சாமான்களும் வர்ணங்களும் அநேகவித உப்புகளும் நம் தேசத்திற்கு வந்து கொண்டிருந்தன. ப்ரான்ஸ் தேசத்திலிருந்து வாஸனைத் திரவியங்களும் ஸோப்புகளும் வந்து கொண்டிருந்தன. ஆனால் யுத்தமாரம்பித்தவுடன் இவ்வயல் நாடுகளிலிருந்து, இச்சாமான்கள் வரமுடியவில்லை. அரசாங்கத்தினர் அப்பொழுதுதான் விழித்துக் கொண்டு, என் செய்வதென்று ஆலோசிக்கத் தொடங்கினார்கள். அப்பொழுதுதான் அநேக கமிஷன்களையும் கமிட்டிகளையும் ஏற்படுத்தி இந்தியாவின் கைத்தொழில் முன்னேற்றத்தைப்பற்றி யோசித்து அதற்குத் தீவிரமாய் உழைக்கலானார்கள். இவ்வித உணர்ச்சியினாலும், யுத்தத்திற்குத் தேவையாயிருந்தபடியாலும் தோல், கண்ணாடி, இரும்பு, காகிதம், ஸோப் இவைபோன்ற கைத்தொழில்கள் வலுவடைந்தன. யுத்தம் நிறுத்திய பிற்பாடு இவ்வியாபாரங்களெல்லாம் கொஞ்சம் சிரமதசையை அடைந்திருக்கின்றன. அரசாங்கத்தார் இச்சமயத்தில் கைத் தொழிலாளிகளை அயல் தேசத்துப்போட்டியிலிருந்து ரக்ஷிக்க வேண்டும். மேலும் உள்நாட்டுப் போக்குவரவு வசதிகளைச் சீர்திருந்தச் செய்ய வேண்டும்.

### அரசாங்கத்தினரின் கடமைகள்

ஒரு வியாபாரிக்கு சீமையிலிருந்து சென்னைப்பட்டணம் வருவதற்கு எவ்வளவு செலவாகுமோ அதே செலவு பம்பாயிலிருந்தும் சென்னைப் பட்டணம் வருவதற்குச்செலவாகுமானால்அவ்வியாபாரி சீமையிலிருந்தே சரக்குகள் வரவழைப்பான் என்பது திண்ணம். மேலும் அயல்நாட்டார்களுக்கு உரிமையான இருப்புப்பாதைகளும், அயல் தேசங்களிலிருந்து வரும் இறக்குமதிப் பொருள்களை உள்நாட்டிற்குள் அனுப்புவதிலும், நம் தேசத்தின் இயற்கைப் பொருள்களை வெளித் தேசத்திற்கு அனுப்புவதிலும் ஊக்கத்தைக் காண்பிக்கின்றன. அரசாங்கத்தார்கள் இன்னும் அதிகாரத்தை எடுத்துக்கொண்டு இந்தியக் கைத்தொழில் முன்னேற்றத்துக்கு ஏற்பாடுகள் செய்யலாம். ஜப்பானியர்களின் அதிசீக்கிரமான முன்னேற்றத்தின் காரணம் ஜப்பான் தேசத்தரசாங்கத்தாரின் ஊக்கமேயாகும். அத்தேசம் நம்முடைய முன்னேற்றத்திற்கு அநேக முறைகளைக் கற்பிக்கின்றது. அவ்வரசாங்கத்தார் கைத் தொழில்களில் முன்னேற்றமடைந்த அயல்நாடுகளுக்குத் தேச மக்களை அனுப்பிப் பெரிய கைத்தொழில் ஆலயங்களில் தேர்ச்சியடையும்படி செய்து, அநேக விதமான தொழில்களைத் தங்கள்தேசங்களில் நடத்திவருகிறார்கள். அயல் தேசங்களுக்குப் போவதற்குமுன் தங்கள் சொந்த தேசங்களிலேயுள்ள கைத்தொழில்களைக் கற்பிப்பதற்காக ஏற்பட்டிருக்கும் பள்ளிக்கூடங்களில் படிப்பிக்கப்படுகிறார்கள். நம் தேசத்தில் இவ்விதமாகக் கற்பிக்கப்படும் பள்ளிக்கூடங்கள் மிகக் குறைந்தனவே. விஸ்திரணத்திற்கும், ஜனத் தொகைக்கும் போதாது. மேல் நாடுகளில் ஜெர்மனி, இங்கிலாந்து, ப்ரான்ஸ், கீழ்த் தேசங்களில் ஜப்பான் இவைகள் போன்ற நாடுகளில் இருப்பதுபோல நம் தேசத்தில் இல்லை. இப்பள்ளிக்கூடங்கள் கைத்தொழில் ஆலயங்களின் பக்கங்களில் இருத்தப்பெற்றுக் கைத்தொழில்களுக்குத் தக்கவாறு மாணாக்கர்கள்போதிக்கப்படவேண்டும்.மேலும் நாட்டிலுள்ள இயற்கை ஸம்பத்துக்களும், அவைகளை நன்கு உபயோகப்படுத்துவதற்கு வேண்டிய நூதன ஆராய்ச்சியைப்பற்றியும், மாணவர்கள் போதிக்கப்படவேண்டும். தற்காலத்தில் கல்லூரியிலுள்ள மாணவர்களுக்கு நம் தேசத்து விளைபொருள்களும், இயற்கைப் பொருள்களும் பெரும்பாலும் தெரிவதில்லை. நம் கைத்தொழில்களுக்கு உபயோகப்படும் பொருள் எவ்விடமிருந்து வாங்குகிறோம் என்றும் தெரிவதில்லை. உதாரணமாக ஒரு மாணாக்கனுக்கு ஐரோப்பாவில் ஸிஸிலியிலும் அமெரிக்காவில் லூயிஸானாவிலும் கந்தகம் அகப்படுவது தெரியுமே யொழிய நமக்கு வேண்டிய கந்தகத்தைக் கொடுக்கும் ஜப்பானில் அகப்படுவது தெரிவதில்லை. மேலும் அரசாங்கத்தார் திறமையுள்ள சாஸ்திரிகளின் மேற் பார்வையின் கீழ், நூதன ஆராய்ச்சிக்குச் சௌகரியங்கள் செய்ய வேண்டும். இவ்விஷயத்தில் ஜெர்மன் தேசத்தரசாங்கத்தினரின் தீவிர ஊக்கத்தை யொத்து நம் அரசாங்கத்தினரும் செய்யவேண்டும். அநேக கம்பெனிகளுக்கு முன் உதவி செய்தும், கைத்தொழில்கள் சாஸ்திர முறையை யொட்டி நடைபெறுவதைப் பரிசீலனை செய்வதற்குச் சாஸ்திர நிபுணர்களை நியமித்தும், மற்றும் அநேக விதங்களிலும் ஒத்தாசை செய்கிறார்கள். "பாடிஷ் அனிலின் அண்ட் ஸோடா வேப்ரீக்" (Badische Anilin and Soda Fabrik) கம்பெனியார்கள் பெருமுதல் செலவிட்டு அநேகவித தொழிலுக்கு ஆதாரமாயுள்ளதாகவும் மலிவானதாகவுமுள்ள பல உப்புக்களும் சாயங்களும் வியாபாரம் செய்வதற்கு ஜெர்மன் அரசாங்கத்தினரின் உதவி கணக்கிட முடியாது. மேலும் தொழில் அதிபதிகளும் அந்நாடுகளில் ஏராளமான பொருள் செலவிட்டுத் தொழில் முன்னேற்றத்திற்குப் பாடு படுகிறார்கள். உதாரணமாக நம் நாட்டில் செழிப்புற்று ஓங்கி பெருந்திரவியத்தைக் கொடுத்துக் கொண்டிருந்த அவுரி நீலத்தை அநேகமாய் அடியோடு போகச் செய்த தயாரிக்கப்பட்ட நீலம் சுமார் முப்பது வருஷங்களின் சாஸ்திர நிபுணர்களின் விடாமுயற்சியும் பல்லாயிரப் பவுன்களின் செலவினுடைய அந்தமுமாகும். இதுவரை நாம் தேசிய இயற்கை ஸம்பத்தையும் தொழில்கள் ஆரம்பிக்கத் தேவையான தனத்தைப் பற்றியும் கைத்தொழில்களைப்பற்றியும் இந்தியக் கைத்தொழில் முன்னேற்றத்திற்கு ஏற்படவேண்டிய வசதியையும் அரசாங்கத்தினர்கைத்தொழில்களுக்கு செய்யக்கூடிய உதவிகளைப் பற்றியும் யோசித்தோம். மேலும் செவ்வனே நடந்துவரும் ஒரு கைத்தொழில் ஆலயத்தைப்பற்றி யோசித்தோம். இப்பொழுது நம் தேசத்தில் சுலபமாக ஆரம்பிக்கக்கூடிய சிற்சில இரஸாயன சம்பந்தமுள்ள கைத்தொழில்களைப் பற்றி யோசிப்போம்.

## ரஸாயன ஸம்பந்தமுள்ள கைத்தொழில்கள்

குறைந்த கட்டணத்திற்கு மின்சார சக்தி கிடைக்குமாகில் இவ்விதம் கிடைப்பதற்கு நம் தேசத்தில் அநேக வசதிகள் முன்னமே காட்டப்பெற்றிருக்கின்றன அநேகவிதமான ரஸாயனக் கைத்தொழில்களை ஆரம்பிப்பதற்கு ஹேதுகரமாயிருக்கும். இதற்குக் காரணமும் மேலே கூறப்பட்டிருக்கிறது.

வயல்களுக்கும் உரங்களில் சில அம்மோனியா உப்புக்கள் பிரபலமாக உபயோகிக்கப்பட்டு வருகிறது. வெகு காலமாக நிலக்கரி காய்ச்சுவதிலிருந்து உண்டாகும் அம்மோனியாவையே, இவ்வித உப்புக்கள் தயாரிப்பதற்கு உபயோகப் படுத்திக்கொண்டிருந்தார்கள். ஹேபர் (Haber) என்னும் ஜெர்மனிய சாஸ்திரிக நிபுணர் பல நூற்றுக்கணக்கான ஆராய்ச்சியினால் காற்றிலிருக்கும் உப்பு வாயுவையும் ஜலவாயுவையும் மின்சார சக்தியின் உதவியைக்கொண்டு சேரச் செய்து அம்மோனியா தயாரிப்பதற்கு மார்க்கத்தைக் காண்பித்தார். விவசாயத்திற்கு வேண்டிய அம்மோனியா உப்புகள் செய்து வெளிநாடுகளுக்கு ஜெர்மனிய தேசத்தார் இப்பொழுது அனுப்புகிறார்கள். அப்படிச் செய்ததில் அம்மோனியா உப்புக்கள் முன்னிருந்த விலைக்குப் பாதி விலையாய் விட்டது. இத்தொழில் பல்லாயிரம் கைத்தொழிலாளிகளுக்கு வேலையுமளிக்கின்றது. சுமார் இருபது வருஷங்களுக்குமுன் அலுமினியம் பாத்திரங்கள் மிக்க அபூர்வமாக இருந்தன; இப்பொழுது ஸர்வ சாதாரணமாய் விளங்கிக்கொண்டிருக்கின்றன. இவ்வுலோகம் தயாரிப்பதற்கு மின்சாரசக்தி அத்தியாவசியம். வேறு முறைகளினால் தயாரிக்கமுடியாது. கேரள தேசத்தில் வேண்டிய அளவு பாக்ஸைட் என்று சொல்லக்கூடிய இயற்கை ஸம்பத்து அகப்படுகிறது. மின்சார சக்தியைக் கொண்டு நம் தேசத்திற்குத் தேவையான அலுமினியப் பாத்திரங்கள் செய்வதிலும் மற்றும் வேறு விதங்களிலும் அவ்வுலோகத்தை உபயோகிக்கலாம்.

ஸோடா உப்பு என்று விளங்கும் உப்பானது அநேக ரஸாயனக் கைத்தொழில்களுக்கு அத்தியாவசியம். அவ்வுப்பு தற்காலத்தில் மின்சார சக்தியின் உணர்ச்சியைக் கொண்டும் தயாரிக்கிறார்கள். ஸோடா என்னும் க்ஷாரம் காகிதம் (Paper) செய்வதிலும் ஸோப் செய்வதிலும் இன்னும் பற்பல ரஸாயனக் கைத்தொழில்களிலும் உபயோகப்பட்டு வருகிறது. இக்க்ஷாரம் மின்சார சக்தியின் உதவியைக் கொண்டே தயாரிக்கப்படுகிறது. இவ்விதம் தயாரிப்பதிலிருந்து "குளோரின்" என்னும் ஒருவகைக் காற்று இலவசப் பொருளாய் அகப்படுகிறது. இக் "குளோரினை" நீர்த்த சுண்ணாம்புடன் சேரச் செய்தால் "க்ளோரைட் ஆப்லைம்" என்னும் ஒருவித உப்பு அகப்படுகிறது. இவ்வுப்பு பெரிய நகரங்களில் ஸப்ளை செய்யப்படும் ஜலத்தை பானத்திற்கு அருகமாகச் செய்வதற்கு உபயோகப்பட்டு வருகிறது. மேலும் "பேப்பர்" வியாபாரத்தில் பேப்பர் "கூழை" வெண்மை நிறமாக்குவதிலும் மற்றும் அநேக வியாபாரங்களுக்கும் உபயோகப்படுகிறது. ஆகையால் மின்சார சக்தியின் உதவியால் அநேக பிரதம கைத்தொழில்களும் உப கைத்தொழில்களும் நடத்தித் தேசக் கைத்தொழிலை முன்னேற்றத்திற்குக் கொண்டு வரலாம்.

நம் தேசத்திற்கு மற்ற ஜெர்மனி, இங்கிலாந்து, ப்ரான்ஸ் இவை போன்ற கைத்தொழில் அபிவிருத்தியடைந்த தேசங்களைக் காட்டிலும் ஒருவித அனுகூலம் இருக்கின்றது. மேலே சொன்ன அயல் தேசங்கள் தாங்கள் தயாரித்த பொருள்களை வெளித் தேசங்களுக்குத் தான் விற்பனை செய்வதற்கு அனுப்பியாகவேண்டும்.

நம் தேசத்திற்குத் தேவையான சாமான்களை நாம் தற்காலத்தில் அயல் நாடுகளிலிருந்துதான் வரவழைத்துக் கொள்ளுகிறோம். ஆகையால் நம் தேசமே நாம் தயாரிக்கும் பொருள்களை எடுத்துக் கொள்ளும். வெளிநாடுகளின் தயவு நமக்கு வேண்டியதில்லை.

சிற்சில பேர்கள் நம் தேசம் கைத்தொழில்களில் தீவிரமாய் இறங்கிவிட்டால் விவசாயத்திற்குக் கேடு ஏற்படுமென்று கருதுகிறார்கள். ஸர் எம். விசுவேசுரய்யா அவர்கள் போலுள்ள நிபுணர்கள் விவசாயத்தையே கைத்தொழிலை யொட்டிய சீர்திருத்தங்கள் செய்து, கைத்தொழில் மாதிரியே நடத்தவேண்டுமென்று சொல்லுகிறார்கள். நம் தேசத்திலுள்ளவர்களுக்கு விவசாயத்தைத் தவிர வேறு விஷயமொன்றும் தெரியாதென்று சில அயல் நாட்டார்கள் தப்பபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள். அப்படியுள்ளோர்க்கு இண்டஸ்டிரியல் கமிஷன் அறிக்கையில் பிரத்தியேகமாக எழுதியிருக்கும் பண்டித மதன்மோஹன் மாளவியாவின் அறிக்கையைப் படித்தால் அவர்களுடைய தப்பு எண்ணங்கள் மாறிவிடும். நம் தேசத்தரசாங்கத்தினரின் தேசிய முன்னேற்றத்திற்கு வஹித்த உபேக்ஷையே நம் தேசக் கைத்தொழில் அபிவிருத்தியின் பின் நிலைக்குக் காரணமாகும். நம் தேசத்திற்குக் கைத்தொழில் அபிவிருத்தியினால் நன்மையுண்டாகுமே யொழிய ஒரு பொழுதும் தீமையுண்டாகாது என்று மேலே சொல்லிய கமிஷன் அறிக்கையில் பலவித முகாந்திரங்களினால் காட்டப்பட்டிருக்கிறது.

ஆகையால் நாம் எல்லோரும் விவசாய அபிவிருத்தியினாலும் கைத்தொழில் அபிவிருத்தியினாலும், அநேக சௌகரியங்களை அடைந்து நம் நாட்டைச் செழிப்புறோங்கச் செய்யுமாறு செய்வதற்குவேண்டிய திறனைக்கொடுத்தருளுமாறு பகவானைப் பிரார்த்தித்து லோக முழுவதும் சுகமடையச் செய்வோம்.

கல்விக் கடல்.

## பிரிட்டிஷ் அரசாங்கத்தின் மருமக்கள் யார்?

### சுதேச மன்னர்களின் நிலைமை

ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியின் நல்லுரை

சென்றவாரம் இராஜபுதான-மத்திய இந்தியாவின் அரசியல் மகாநாடு ஸ்ரீமதி கஸ்தூரிபாய் காந்தியின் தலைமையில் நடைபெற்றது. அது காலை அவர் நிகழ்த்திய சொற்பொழிவு வருமாறு:—

நீங்கள் காந்தியடிகளிடத்தில் கொண்டிருக்கிற நம்பிக்கையினாலேயே என்னைத் தலைவியாக இம் மகாநாட்டிற்குத் தெரிந்தெடுத்தீர்கள். பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் சுதேச சமஸ்தானங்களுக்கும் நன்மை தரும்படியான காரியங்களையே நீங்கள் செய்ய வேண்டும். உண்மையில் நமது தேசம் ஒன்றே. பிரிட்டிஷ் இந்தியா வென்றும் சுதேச சமஸ்தானங்களென்றும் சுதேச மன்னர்கள் வேற்றுமை பாராட்டக் கூடும். ஆனால் குடிகளாகிய நமக்கு அவ்வேற்றுமை வேண்டுவதில்லை. சிலர், நமது சுதேசமன்னர்களின் மீது கோபங்கொண்டவர்களாயிருக்கிறார்கள். இந்த மன்னர்களிற் சிலர், சர்வகட்சி மகாநாட்டில் சரியாக நடந்து கொள்ளவில்லை யென்பது உண்மைதான். அதற்காக அவர்கள் என்ன செய்யக் கூடும்? ஒரு குடும்பத்தில் மருமக்கள் இருக்கும் நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் அபிப்பிராயத்தை வாய்விட்டுச் சொல்ல முடியாது. அப்படியே சொல்வதானால் பிரிட்டிஷ் அரசாங்கமாகிய மாமியாரைத் திருப்தி செய்ய முடியாது.

* * *

நீங்கள் அனைவரும் கதர் உடுத்த வேண்டும். மதுவிலக்கு, அந்நியத் துணி பகிஷ்காரம் ஆகிய இவைகளைச் சிறிதும் தளர்த்திவிடக் கூடாது. இராஜ ஸ்தானத்திலுள்ள சகோதரிகள் இவ்விஷயத்தில் முனைந்து உழைக்க வேண்டும். இன்னும் இந்நாட்டில் கோஷா முறை இருக்கிறது. ஸ்திரீகளை அடைத்து வைப்பதனால் அவர்களைக் காப்பாற்ற முடியாது. இந்தியாவிலுள்ள எல்லா ஸ்திரீகளும் இப்பொழுது விழிப்படைந்திருக்கிறார்கள். இராஜ ஸ்தான் சகோதரிகள் பின்னடைந்திருந்தால் அதனால் அதிக கஷ்டம் உண்டாகும். இந்தப் பிரதேசத்தில் இன்னும் ஒரு புதிய வழக்கம் அநுஷ்டிக்கப் பட்டு வருவதாகக் கேள்விப் பட்டேன். பெண்களுக்கு விவாகம் நடைபெறும்போது அவர்களுடன் ஆண் வேலைக்காரர்களையும் பெண் வேலைக்காரர்களையும் சீதனப் பொருளாகக் கொடுக்கிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். இங்ஙனம் கொடுக்கப்படும் வேலைக்காரர்கள் அடிமைகளாக நடத்தப்படுகிறார்கள் என்றும் கேள்விப்படுகிறேன். இது நடைபெறாமலிருக்க வேண்டுமென்பது என் விருப்பம். சிலர், இந்தியாவுக்குச் சுயராஜ்யம் வந்தால் அதில் சமஸ்தானப் பிரஜைகள் சேர்த்துக் கொள்ளப்பட மாட்டார்கள் என்று கருதுகிறார்கள். இந்த அச்சத்திற்கு எவ்வித ஆதாரமுமில்லை. சூரியோதயமானால் அது எல்லாருக்கும் வெளிச்சத்தைத்தரும். சுதேச மன்னர்கள், கௌரவத்துடன் வாழ வேண்டுமானால் அவர்கள், தங்கள் பிரஜைகளை அடிமைக்கட்டில் நீண்டகாலம் வைத்துக்கொண்டிருக்க முடியாது. சுதேச சமஸ்தானப் பிரஜைகளுக்கு நாம் விடுதலையளிக்க வேண்டுமானால், முதலில் சுதேச மன்னர்களை விடுதலை செய்யவேண்டும்.

* * *

சுதேச மன்னர்களுக்கும் நான் சில வார்த்தைகள்கூறவேண்டியவளாயிருக்கிறேன். அவர்கள் காலநிலையையறிந்து, தங்கள் பிரஜைகளின் சுதந்திர விருப்பத்தைப் பூர்த்தி செய்யவேண்டும். ஐரோப்பிய சிம்மாதனங்கள் ஒன்றன் பின்னொன்றாக விழுந்துகொண்டிருக்கின்றன. இந்திய மன்னர்கள், தங்கள் பிரஜைகளின் இதயத்தில் சிம்மாதனங் கொண்டு எழுந்தருளி இருக்கவேண்டும். அடக்குமுறையினால் இராஜ்ய பாரத்தை வகிப்பதென்ற காலம் போய்விட்டது. தீண்டாமையை நாம் அடியோடு ஒழித்தால்தான் நாம் ஆண்டவன் தரிசனத்தைப் பெற முடியும். சுயராஜ்யச் செய்தியோ, கிராமங்களிலெல்லாம் பரவி இருக்கிறது. ஆதலின் நாம் கிராமங்களில் சென்று சரியானபடி பிரசாரம் செய்வோமானால், நம்முடைய சுயராஜ்யபாதை மிகச் சுலபமாக இருக்கும். அரசாங்கத்தார், ஒவ்வொரு கிராமத்திற்கும் தடிகளையும் துப்பாக்கிகளையும் கொண்டு செல்லமுடியாது. ஆரம்பத்தில் கிராமவேலை, சலிப்பாகவும் வெறுப்பாகவும் தோன்றும். ஆனால் கிராமவாசிகளின் இதயத்தை நீங்கள் கவர்ந்து விட்டீர்களேயானால் நீங்கள் அக்கிராமங்களை எளிதில் விட்டு வர மனம் வராது. கிராமங்களில்தான் சுயராஜ்ய சாவி இருக்கிறது.

* * *

நான் பல கஷ்டங்களையும் ஆசாபங்கங்களையும் அநுபவித்திருக்கிறேன். ஆனால் ஒரு நாள் சுயராஜ்யசூரியன் உதயமாகப்போகிறான் என்பது நிச்சயம். நான்கிழவியாகிவிட்டபோதிலும், சுயராஜ்ய உதயத்தைப் பார்க்க ஆவலுள்ளவளாயிருக்கிறேன். இளைஞர்கள் தங்கள் உழைப்பை வீணாக்கக்கூடாது. அவர்கள் தங்கள் சக்தியைக் காங்கிரஸோடு பிணைத்து ஒடும்படி செய்யவேண்டும். எப்பொழுதாவது ஒருநாள், காங்கிரஸ் உங்கள் கையில்வந்தே ஆகவேண்டும். அப்பொழுது நீங்கள்தான் சுயராஜ்ய வேலைசெய்ய வேண்டும். இராஜஸ்தானம், வீரர்கள் வாழ்ந்த நாடு; தியாகம் நிரம்பியநாடு. உயிரையும் பொருளையும் அர்ப்பணம் செய்வதே பெரிய உத்ஸவமென்று உங்கள் பெரியோர்கள் கருதினார்கள். ஆனால் இவைகளைவிடச் சிறந்த தொன்று இருக்கிறது. அதுவே ஒழுக்கம். இந்த ஒழுக்கத்தை உங்கள் முன்னோர்கள் மிகப்பெரிதாகப் போற்றிவந்தார்கள். பண்டைக்காலம் முதற்கொண்டே நீங்கள் தேசபக்தி உணர்ச்சி யுடையவர்களாக இருக்கிறீர்கள். இந்தத்தேசபக்தி கிரணங்கள் இப்பொழுது இன்னும் அதிக ஒளிவிட்டுப் பரவுமாறு நீங்கள் செய்வீர்களாக. என்னுடைய மனப்பூர்வமான ஆசீர்வாதங்கள் உங்களுக்கு உரியன. நம்முடைய சகோதரிகள் நிலைமை உயருமாக! தீண்டாதாரின் துயரங்கள் தொலையுமாக! வறுமையால் வாடும் ஏழைமக்கள், கதரின் மூலமாகத் தங்கள் பசியைத் தணித்துக் கொள்வார்களாக! பி. பி. ஜர்னல்.

லாலா லஜபதிராய் ஜெயந்தி:— 17-11-31ல்குன்றக்குடி காந்தியடிகள் கருணை நிலயத்தினரால் லஜபதிராய் ஜயந்தி கொண்டாடப்பட்டது. லஜபதி திருவுருவப் படத்துடன் ஓர் ஊர்வலம் வந்து மேற்படியார் பாடசாலைக்கு முன்னர் பலவான்குடி உயர்திரு பொன்னம்பல சிவம் அவர்கள் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் உதவி காரியதரிசி திரு. கு கும்பலிங்கம் அவர்கள் லஜபதி சரிதத்தைச் சுமார் இரண்டுமணி நேரம் விரிவுரை நிகழ்த்தினர் என்று காரியதரிசி தெரிவிக்கிறார்.



[One side page dark]



திருவாங்கூரில் இனி தேவோஸ்வம் இலாகாவின் நிருவாகஸ்தராக திவானே இருப்பார்.

o o o

மௌலானா ஷவுக்கத்அலி 27-11-31ல் ரோமாபுரியில் போப்பரசரைப் பேட்டி கண்டார்.

o o o

லார்ட் வில்லிங்டனுடைய குமாரர் 27-11-31ல் பம்பாய் வந்து பின்னர் டெல்லிக்குச் சென்றார்.

o o o

ஆப்கானிஸ்தானத்தில் செனட் சபை என்ற உயர்தர சட்டசபை யொன்று புதிதாக திறவப்பட்டிருக்கிறது.

o o o

சமீபத்தில் பம்பாய் நகரத்தில் பதினைந்து ஸ்திரீகள் கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகளாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள்.

o o o

கொச்சி மகாராஜா வைத்திய சிகிச்சை செய்துகொள்ளும் பொருட்டு சென்னைக்குத் தமது பரிவாரத்துடன் வந்திருக்கிறார்.

o o o

ஜப்பல்பூர் நகரசபை அங்கத்தினர்கள், தங்களுடன் ஆறு காங்கிரஸ் வாதிகளை அங்கத்தினர்களாகச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

o o o

டிசம்பர் மாதம் 22, 23 தேதிகளில் நடைபெறும் மகாராஷ்டிர இளைஞர்கள் மகாநாட்டிற்கு பாபு சுபாஷ் சந்திரபோஸ் தலைமை வகிப்பார்.

o o o

குவாலியர் சமஸ்தானத்துப் பெரிய மகாராணியார் சென்ற 23-11-31ல் பம்பாயிலுள்ள குவாலியர் அரண்மனையில் தேகவியோகமானார்.

o o o

கடலூர் தாலூகாவைச் சேர்ந்த சங்கிலி குப்பம் கிராமத்தில் உள்ள ஜனங்கள் எல்லாரும் இனிக் குடிப்பதில்லையென்று ஒருமுகமாகத் தீர்மானித்திருக்கிறார்களாம்.

o o o

ஜெருசலேத்தில் நடைபெறும் அகில உலக முஸ்லீம் மகாநாட்டிக்கு சுல்தான் இப்னு-ஸ-ஊத், தமது பிரதிநிதியை அனுப்பமாட்டாரென்று தெரிகிறது.

o o o

அகில இந்திய ஆயுர்வேத மகாநாடு டிசம்பர் மாதம் 22ந்தேதி முதல் 25ந்தேதி வரை குவாலியரில் வைத்திய ஜடாசங்கர் திரிசம்ஜி ஆசாரியார் என்பாரின் தலைமையில் நடைபெறும்.

o o o

பிரபல கொள்ளைக்காரத் தலைவரான ஸ்ரீமான் கதிர்வேலு படையாச்சி என்பார், மாயவரத்திற்குச் சமீபமான ஒரு கிராமத்தில் போலீசாரால் 27-11-31 காலை சுட்டுக் கொல்லப்பட்டார்.

o o o

மதுரை மிட்டிக் கம்பெனியார், வங்காள வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிக்குச் சுமார் நானூறு ரூபா பெறுமான ஐம்பது டஜன் கென்ஜியை அளித்தார்கள் என்று நமக்கு அறிவிக்கப்படுகிறது.

o o o

ஸர் டேவிட் புரூஸ் என்ற பெரிய விஞ்ஞான சாஸ்திர நிபுணர், தமது மனைவி இறந்து மரணச் சடங்குகள் நடைபெற்றுக் கொண்டிருக்கையிலேயே சென்ற வாரத்தில் லண்டனில் இறந்துவிட்டார்.

o o o

"ஹானிபல்" என்ற பெரிய ஆகாயவிமானம் 4-12-31-ல் கராச்சிவந்துசேரும். இது இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் முறையே தபால்களை எடுத்துச்செல்லும். இதில் 42 பிரயாணிகள் உட்காரலாம்.

o o o

குஜராத் மாகாண காங்கிரஸ் கமிட்டியார், பூரி காங்கிரஸ் தலைவர் பதவிக்கு பாபு இராஜேந்திர பிரசாத், ஸ்ரீமான் இராஜகோபாலாச்சாரி ஆகிய இவர்களுடைய பெயர்களைச் சிபார்சு செய்திருக்கின்றனர்.

o o o

27-11-31-ல் நடைபெற்ற இராஜாங்க சபையில் உப்பு வரவுசெலவு மசோதா மூன்றும் முறையாகப் படிக்கப்பட்டு நிறைவேறியது. இராஜப் பிரதிநிதி, இதைச் சட்டமாக அமுலுக்குக் கொண்டுவந்துவிட்டார்.

o o o

சுதேச சமஸ்தானங்களிலுள்ள ஹிந்துக்களின் மகாநாடொன்று டிசம்பர் மாதம் 25, 26, 27 தேதிகளில் இராஜபுதனத்தைச் சேர்ந்த ராவ்ராஜா கோபால்சிங் என்பாரின் தலைமையில் லாகூரில் நடத்த ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது.

o o o

1-12-31 முதல் தபால் கட்டணங்கள் உயர்த்தப் பட்டதால், இனி இங்கிலாந்து, அயர் ஐர்லாந்து முதலிய பிரிட்டிஷ் நாடுகளுக்கு அனுப்பப்படும் கார்டுகளுக்கு இரண்டணாவும், கவர்களுக்குஇரண்டரையணாவும் வசூலிக்கப்படும்.

o o o

காஷ்மீர மகாராஜாவினால் ஸ்ரீமான் கிளான்ஸி அவர்களுடைய தலைமையில் நியமிக்கப்பட்டிருக்கும் கமிஷனை பகிஷ்கரிக்க வேண்டுமென்று காஷ்மீரத்திலுள்ள ஹிந்துக்களும் சீக்கியர்களும் கிளர்ச்சி செய்து கொண்டிருக்கின்றனர்.

## கலம்பகம்

ஸ்ரீமான் வல்லபாய் படேலுக்குச் சமீபத்தில் பம்பாயில், மூக்குச் சம்பந்தமான ஓர் ஆபரேஷன் நடைபெற்றது. இன்னும் சிறிது காலம்வரை, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி காரியாலயம், ஆமதாபாத்திற்கு மாற்றப்பட்டு அங்கேயே இருக்கும்.

o o o

மத்திய திருவாங்கூரிலுள்ள குன்னங்குளம் என்ற ஊரில் பள்ளிக்கூட உபாத்தியாயரா யிருக்கும் ஒருவர் தமது மனைவியையும் குழந்தையையும் கொலை செய்துவிட்டாரென்று சொல்லப்படுகிறது. போலீசார் விசாரணை செய்துவருகின்றனர்.

o o o

18-11-31-ல் பனுவில் இரண்டு முகமுள்ள ஓர் எருமைக் கன்று பிறந்தது. ஆனால் இது பிறந்த மூன்று மணி நேரமே உயிர் வாழ்ந்திருந்தது. இதற்கு இரண்டு தலைகளும் நான்கு கண்களும், ஆனால் ஒரே கழுத்தும், இரண்டே காதுகளும் இருந்தன.

o o o

நாசிக்கிலும் குருவாயூரிலும் ஆலயப் பிரவேச சத்தியாக்கிரகம் மிகத் தீவிரமாக நடைபெற்றுக்கொண்டு வருகிறது. நாசிக்கில், மாஹார்கள் என்னும் ஒருவகைத் தாழ்ந்த வகுப்பினர், காலாராம் கோயிலின் நான்கு வாயில்களைக் காத்து வருகின்றனர்.

o o o

தென்னாட்டில் ஸ்ரீமான் பி. குருசாமி பிள்ளை என்ற ஓர் இளைஞர் கணிதத்தில் பெரிய நிபுணராக விளங்குகிறார். இவருக்குக் கண்பார்வையில்லை. இவர் சமீபத்தில் மதுரையில் ஒரு பொதுக்கூட்டத்தில் தமது கணித திறமையை விளக்கிக் காட்டினார்.

o o o

பம்பாய்ச் சட்டசபை அங்கத்தினரான என். என். படேல் என்பாரும் பாய்சித்சேர் என்பாரும், பென், பன்வால், சர்ஜாத் ஆகிய மூன்று தாலுக்காக்களிலும் இரண்டு மாதம் வரை பொதுக்கூட்டங்களில் பேசக்கூடாதென்று தடை உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறார்கள்.

o o o

சென்னை ஒற்றைவாடையிலுள்ள பரமானந்ததாஸ் சோடாதாஸ் சத்திரத்தைக் கட்டி வைத்தவரும், பிரபல பட்டு வியாபாரியும், சிறந்த தர்மிஷ்டருமான ஸ்ரீமான் பரமானந்ததாஸ் சோடாதாஸ் என்பார் 27-11-31ல் தமது 64 வயதில் சென்னையில் மரணமடைந்துவிட்டார்.

o o o

பெஷாவரில், சென்ற 85 தினங்களாக விசார விடுதிகளின் மறியல் நடைபெற்று வருகிறது. ஆனால் பெஷாவர் டிப்டி கமிஷனர், மறியலை நிறுத்தி விடும்படி உத்திரவு பிறப்பித்திருக்கிறார். இதைக் கண்டித்து, எல்லைப்புற சிப் கமிஷனர், முதலியோருக்கு அறிக்கை அனுப்பப்பட்டிருக்கின்றது.

o o o

மாலத்தீவுகளின் சுல்தான், வருஷந்தோறும் இலங்கை கவர்னருக்குக் கப்பம் கட்டுவது வழக்கம். அப்படியே 27-11-31-ல், சுல்தானின் தூதர்கள் ஜனாப் அப்துல்ஹமீத் எப்பின்டி என்பாரின் தலைமையில் வாசனைத் திரவியங்கள், தைலங்கள் முதலியவைகளைக் காணிக்கையாகக் கொண்டு வந்தார்கள்.

o o o

அலகாபாத் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியால் கூட்டப்பட்ட கிருஷிகர் மகாநாடு 24-11-31-ல் பாபு புருஷோத்தமதாஸ் தாண்டன் தலைமையில் நடைபெற்றது. 18-11-31-ல் அலகாபாத் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியார் வரி கொடா இயக்கத்தை ஆதரித்து நிறைவேற்றிய தீர்மானங்களை இம்மகாநாடு ஆதரித்தது.

o o o

அலகாபாத் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியார் வரி கொடா இயக்கம் தொடங்கப்படவேண்டு மென்பதைப் பற்றித் தீர்மானித்திருப்பதை விவசாயிகளுக்கு எடுத்துச் சொல்ல வேண்டி பண்டித ஜவஹர்லால் நேரு, அலகாபாத் ஜில்லாவிலுள்ள கிராமங்களில் சுற்றுப்பிரயாணம் செய்து வருகிறார்.

o o o

ஸர். தி. சதாசிவய்யர் இறந்துபோன நான்காவது வருஷக் கொண்டாட்டம் 24-11-31ல் சென்னையில் நடைபெற்றது. அதுகாலை நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ஸர். சி. சங்கரன் நாயர், ஸர். சி. வி. குமாரசாமி சாஸ்திரியார் முதலியோர் காலஞ் சென்ற ஐயருடைய நல்லியல்புகளைப் பாராட்டிப் பேசினார்கள்.

o o o

பூரியில் நடைபெறப்போகும் காங்கிரஸ் மகாநாட்டிக்கு மத்திய மாகாண மஹாராஷ்டிர மாகாண காங்கிரஸ் கமிட்டியார் பாபு இராஜேந்திர பிரசாத், ச. இராஜகோபாலாச்சாரியார், பாபு சுபாஷ் சந்திரபோஸ், டாக்டர் அன்சாரி, கான் அப்துல் கபூர்கான் முதலியவர்களுடைய பெயர்களைச் சிபார்சுசெய்திருக்கின்றனர்.

நவஜவான் மகாநாடு கூட்டக்கூடாதென்று பம்பாய் போலீஸ் கமிஷனரால் விடுக்கப்பட்டிருந்த தடை யுத்திரவு 30-11-31லிருந்து இன்னும் ஒரு மாதம் வரை நீடிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் மேற்படி மகாநாட்டார், சௌபதி கடற்கரையில் சர்தார் ஐமயத்சிங்கின் தலைமையில் 12-12-31ல் தங்கள் மகாநாட்டை நடத்தத் தீர்மானித்திருக்கின்றனர்.

o o o

வங்காள அவசரச் சட்டத்தின் கீழ் கல்கத்தா, டாக்கா முதலிய இடங்களில் பலர் கைது செய்யப்பட்டு வருகின்றனர். கல்கத்தாவில் ஸ்ரீமதி குசுமகுமாரி நாக் என்னும் ஒரு ஸ்திரீ கைது செய்யப்பட்டிருக்கிறார். பிரபல காங்கிரஸ் தலைவராகிய ஸ்ரீமான் சதீஸ்சந்திர தாஸ் குப்தாவும், டாக்காவில் என்ற இடத்தில் கைது செய்யப்பட்டிருக்கிறார்.

o o o

28-11-31ல் லண்டன் எஸ்ஸெக்ஸ் மண்டபத்தில் ஸ்ரீமான் சென்குப்தா ஒரு சொற்பொழிவு நிகழ்த்துவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பண்டிதமாளவியாவும் ஸ்ரீமதி சரோஜனிதேவியும் இதில் பேசுவதாக இருந்தது. ஆனால் ஸ்ரீமான் சக்லத் வாலாவின் தலைமையில் சில பொது உடைமைக் கட்சியினர் வந்து கூட்டத்தில் கலாம் விளைவித்துக் கலைத்துவிட்டார்கள்.

o o o

இந்தக் கிறிஸ்மஸ் வாரத்தில் கல்கத்தாவில் நடைபெறப்போகும் டாகூர் ஜயந்தியின் போது, கவிஞர் டாகூருக்கு ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுப்பதென்று கல்கத்தா நகரசபையார் தீர்மானித்திருக்கின்றனர். இந்த உபசாரப்பத்திரம் வங்காளி பாஷையிலேயே படித்துக்கொடுக்கப்படும். இதற்காக 1500 ரூபாய் செலவழிப்பதென்று நகரசபையார் தீர்மானித்திருக்கின்றனர்.

o o o

வலையபட்டி வலம்புரிக் கல்விச்சாலை :- இவ்வூர்த்திருவாளர் வ. டு. நா. இராமஞ்செட்டியாரவர்கள் காம்பவுண்டில் ஐப்பசித் திங்கள் 20 ஆம் நாளிரவு ஒரு கூட்டம் கூடிற்று. அதற்குத் தஞ்சைக் கரந்தைத் தமிழ்ச்சங்க கலாசாலைத் தலைமை யாசிரியர் திருவாளர், சிவ. குப்புசாமிப் பிள்ளையவர்கள் தலைமை வகித்தார்கள். நந்தனார் நாடகம் பள்ளிக்கூட மாணவர்களால் நடாத்திக் காட்டப்பெற்றது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

பம்பாயில் பார்சிகளின் கூட்டமொன்று 29-11-31ல் நடைபெற்றது. பார்சி சமூகத்தில் ஆசாரசீர்திருத்தம் செய்யவேண்டுமா வேண்டாமா வென்பதைப்பற்றி வாதம் நடத்த இக்கூட்டம் கூட்டப்பட்டது. ஆனால் சீர்திருத்தத்தை ஆதரிக்கிறவர்களுக்கும், எதிர்க்கிறவர்களுக்கும் விரோதமேற்பட்டு இருசாராருக்கும் கூட்ட மண்டபத்திலேயே கைகலந்த சண்டை நடைபெற்றது. கடைசியில் போலீசார் வந்து கூட்டத்தைக் கலைத்தனர்.

o o o

ஜயபுரி சமஸ்தான மன்னர்கள் சென்ற நூறு வருஷங்களாக சந்ததி இல்லாமலே, ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தார்கள். ஆனால் இப்பொழுதுள்ள மன்னருக்கு ஓர் ஆண்மகவு பிறந்திருக்கிறது. இதை உத்தேசித்து ஜயபுரி முழுவதும் சந்தோஷக் கொண்டாட்டங்கள் கொண்டாடப் பட்டன. மன்னரும், தம் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் பொருட்டு சுமார் இருபது லட்சம் ரூபாவரை இன்னிகுனா செய்திருப்பதுமன்றி, வேறு சில நன்மைகளையும் செய்திருக்கிறார்.

o o o

தற்போதைய பணமுடை காரணமாக ஐ. சி. எஸ். உத்தியோகஸ்தர்களுடைய சம்பளம் தாற்காலிகமாகக் குறைக்கப்படவேண்டுமென்று காமன்ஸ் சபையில் கொண்டுவரப்பட்ட மசோதா மூன்றும் முறையாக நிறைவேறி விட்டது. இது 1933-ம் வருஷம் மார்ச்சு மாதம் வரை அமுலில் இருக்கும். சம்பளத்தைக் குறைப்பதினால் அதிகமாகப் பாதிக்கப்படும் உத்தியோகஸ்தர்கள், மனுச் செய்துகொண்டால், இச்சட்டப் பிரயோகத்தினின்றும் அவர்கள் விலக்கப்படுவார்கள்.

o o o

பம்பாயிலுள்ள சில குஜராத்தி நடிகர்கள் சென்ற 27-11-31 இரவு "கியாமா" என்ற ஒரு நாடகத்தை ராயல் ஆபராஹவுஸில் நடத்துவதாக இருந்தார்கள். கல்லூரியில் படிக்கும் ஒரு பார்சி பெண் தன்னுடைய ஜாரதுஷ்டிர மதத்தின்மீது வெறுப்புக்கொண்டு ஹிந்து மதத்தைத் தழுவிக்கொண்டாளென்பது இந்நாடகக் கதையின் சுருக்கம். இதை நாடகம் பார்க்கவந்த பார்சிகள் ஆட்சேபித்து, கொட்டகையில் பெரிய குழப்பம் விளைவித்தார்கள். கடைசியில் நாடகம் நடைபெறாமலே நின்றுவிட்டது.

o o o

பம்பாய்க்குச் சமீபமாயுள்ள குர்லா வென்னுமிடத்தில் உள்ள சுதேசி மில்லில், தொழிலாளர்கள் சில நாட்களாகவே வேலைநிறுத்தஞ் செய்துகொண் டிருந்தனர். சென்ற 22-11-31ல் சில தொழிலாளர்கள் மில்லுக்கு எதிரேயிருந்து குழப்பம் விளைவித்தார்களென்றும், உடனே போலீசார் வந்து இரண்டு முறை துப்பாக்கிப் பிரயோகம் செய்ய நேரிட்டதென்றும் சொல்லப்படுகின்றன. நூறு பேர் காயமடைந்ததாகவும் முப்பது பேர் கைது செய்யப்பட்டதாகவும் தெரிகின்றன.

o o o

டெல்லி முஸ்லீம் சங்கத்தார் ஸர் ரஹிம் பக்ஷ் என்பவருடைய தலைமையில் சென்ற வாரம் இராஜப் பிரதிநிதியான லார்ட் வில்லிங்டனைப் பேட்டி கண்டு பேசினர். உத்தியோக வகுப்புக்களில் தங்கள் சமூகத்தினருக்கு அதிக பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவேண்டு மென்றும், தங்கள் வகுப்பாருக்கெனத் தனியான தொழிலாளர் சங்கங்கள் காண உத்தேசித்திருப்பதாகவும் இவர்கள் தெரிவித்துக்கொண்டனர். வகுப்புவாரியாகச் சங்கங்கள் ஏற்படுத்துவது நல்லதல்லவென்றும், எல்லாரும் ஒற்றுமைப்பட்டதொரு நலனை நாடுவதாக இருக்கவேண்டுமென்றும் லார்ட் வில்லிங்டன் பதில் கூறினர்.

o o o

காஷ்மீரத்து நிலைமை சிறிது அமைதியடைந்து வருகிறது. சமஸ்தான விவகாரங்களைக் குறித்து விசாரணை நடைபெற்று வருவதால், முஸ்லீம்கள் தங்கள் கிளர்ச்சிகளை நிறுத்திக்கொள்ள வேண்டுமென்று ஸர் மூஹம்மது யாகூப் யோசனை சொல்லியிருக்கிறார். பஞ்சாப் அரசாங்கத்தின் கீழ் ரெவின்யூ இலாகாவில் உத்தியோகம் பார்த்து வந்த ராஜாகான் அப்ஸல்கான் என்பார் ஜம்மு கவர்னராக நியமிக்கப்பட்டிருக்கிறார். சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்ட பலருடைய தண்டனை காலம் குறைக்கப்பட்டிருக்கிறது. காஷ்மீர மன்னர், இராஜப் பிரதிநிதியுடன் கலந்து பேச இதுகாலை டெல்லிக்கு வந்திருக்கிறார்.

o o o

மயிலாப்பூர் நாடார் சங்கத்தின் நான்காவது கூட்டம் 29-11-31ல் வி. பி. சயினர் நாடார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவர் முகவுரைக்குப் பின் ஸ்ரீமான் பு. சிதம்பர நாடார் அவர்கள் கதரின் அவசியம் என்பது பற்றியும் ஸ்ரீமான் S. திரவிய நாடார் B. A அவர்கள் தற்கால இராஜீய நிலைமை என்பதுபற்றியும் பேசினார்கள். பின்னர் பின்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:- (1) "மாஜி கார்ப்பொரேஷன் அங்கத்தினரும் பிரபல டாக்டருமாகிய ஸ்ரீமான் ஆசீர்வாத நாடார் அவர்களின் அகால மரணத்தைக்குறித்து இக்கூட்டம் வருந்துகிறது.(2) ஸ்ரீமான் S. S. ஆதித்த நாடார் அவர்கள் தட்சிண நாடார் பேட்டைகளை மேற்பார்வையிட மறந்துவிட்டபடியால் மேற்படி பேட்டைகளைக் கவனிக்கத்தக்க, நிர்வாகிகளை ஏற்படுத்தும்படியாய் இக்கூட்டம் தட்சிணநாடார்களை கேட்டுக்கொள்கிறது" என்று காரியதரிசிகள் எழுதுகிறார்கள்.

o o o

பரோடா சமஸ்தானத்தில் தீண்டாதார் பிள்ளைகளுக்கென்று தனியான பள்ளிக்கூடங்கள் இருக்கக் கூடா தென்றும், ஜாதி ஹிந்துக்களின் பிள்ளைகள் படிக்கும் பள்ளிக்கூடங்களிலேயே இவர்களும் சேர்ந்து படிக்க வேண்டுமென்றும் சமஸ்தான அரசாங்கத்தார் உத்திரவு செய்திருக்கின்றனர் என்பது நேயர்களுக்குத் தெரியும். இதை ஆட்சேபித்து ஜாதி ஹிந்துக்கள் கிளர்ச்சி செய்து வருகிறார்கள். ஒரு கிராமத்தில், ஜாதி ஹிந்துக்கள், தங்கள் பிள்ளைகளைப் பள்ளிக் கூடங்களுக்கு அனுப்புவதில்லையென்று தீர்மானித்திருக்கிறார்கள். மற்றொரு கிராமத்தில், தீண்டாதாருடைய பயிர்பச்சைகள் யாவும் அழிக்கப்பட்டு விட்டனவென்று சொல்லப்படுகிறது. தீண்டாதாரின் முன்னேற்றத்திற்காக உழைக்கும் ஒரு கனவான் ஒரு கிராமத்திற்குச் சென்றபோது, ஜாதி ஹிந்து பிள்ளைகளால் கல்லால் தாக்கப்பட்டார் என்று ஒரு செய்தி கூறுகிறது.

o o o

சமீபத்தில் ஸ்ரீமான் வி. ஜே. படேல், லண்டனில் செண்ட்ஜேம்ஸ் அரண்மனையினின்று சென்று கொண்டிருந்தபோது, ஒரு மோட்டார் வண்டியினால் தாக்கப்பட்டார். இதனால் இவர் கீழே விழுந்து காயமுமடைந்தார். உடனே போலீசார் இவரை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்றார்கள். போலீஸ் அதிகாரிகளும் ஆஸ்பத்திரி அதிகாரிகளும் இவருடைய பெயரைச் சொல்லும்படி கேட்க இவர் மறுத்துவிட்டார். நீண்ட நேரம் ஆஸ்பத்திரியில் இருக்கவும் மறுத்துவிட்டார். இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியிலிருந்து நஷ்டஈடு கேளுங்கள் என்று இவருக்குக் கூறினார்கள். "நான் அஜாக்கிரதையாக இருந்ததற்காக நஷ்ட ஈடு கேட்பானேன்? மோட்டார் வண்டி வரும் வழியில் நான் அஜாக்கிரதையாக இருந்தால் அதற்காக நானே பணம் பெறவேண்டுமோ?" என்று கூறினார். இப்பொழுது அவர் சிறிது சௌஸ்தமடைந்திருக்கிறார் என்று அமிருத பஜார் பத்திரிகையின் நிருபர் தெரிவிக்கிறார்.

## 1300 புதிய சாதனங்களைக் கண்டுபிடித்தவர் யார்?

### தாமஸ் எடிசனின் வரலாறு

(ஸ்ரீமான் சி. என். வைத்தீசுவரன்)

முதல் முதல் மின்சார விளக்கைக் கண்டுபிடித்து எங்கும் பரவச் செய்து நாகரிகத்தையும் செல்வத்தையும் பெருக்கின அமெரிக்க விஞ்ஞான சாஸ்திர நிபுணரான தாமஸ் எடிசன் என்றவர் சென்ற அக்டோபர்மாதம் பதினெட்டாந் தேதியன்று தம் எண்பத்தைந்தாம் ஆண்டில் காலஞ்சென்றார். இவர் ஞாபகார்த்தமாக அமெரிக்காவில் அன்று இரவில் சில நிமிடங்களுக்கு எல்லா மின்சார விளக்குகளும் அணைக்கப்பட்டன. சுமார் நாற்பது வருஷங்களில் அநேக யந்திரங்களையும் சௌகர்யங்களையும் கண்டுபிடித்துத்தன் பேரில் 1300 "பேட்டன்டுகள்" செய்து கொண்டார். இரண்டு வருஷங்களுக்கு முன் ஹென்ரிபோர்டின்—போர்டுமோட்டார் உண்டாக்குபவர்—உதவியால் மின்சார விளக்கின் ஐம்பதாம் ஆண்டுவிழா நடைபெற்றபொழுது இவர் பாலியபிராயத்தில்செய்த பரிசோதனைகளை மறுபடியும் அனைவரும் கண்டுகளிக்கும்படி செய்துகாட்டினர். உலகப் பிரசித்தி பெற்ற இவருடைய இளமைப் பருவம் மற்றவர்களுடையதைப் போலவே இருந்தாலும் ஊக்கமும் விடாமுயற்சியும் இவரை இப்பதவிக்குக் கொண்டுவந்தன.

### இளமைப் பருவம்

இவர் அமெரிக்காவில் "ஓஹியோ" வென்ற இடத்துக்குச் சமீபத்திலுள்ள "நியூஜர்ஸி" என்ற விடத்தில் ஓர் எளிய குடும்பத்தில் பிறந்தவர். கல்வி கற்பதற்குச் சமீபத்திலுள்ள ஒரு பாடசாலைக்குப் போய் வருவதுண்டு. உபாத்தியாயர் சொல்லிக்கொடுப்பதைப் பற்றுடன் கிரகியாமல் தம் மனதுக்குள்ளேயே எதோ எண்ணிய வண்ணமாய் இருப்பார். இதனால் கேட்ட கேள்விகளுக்குத் தகுந்த விடை அளிக்க அசக்தராயிருப்பார். ஒருநாள் உபாத்தியாயருக்குக் கோபம் பொங்கி எடிசனை 'மூளையில்லாத முட்டாள்' என்று பலர் முன்னிலையில் நிந்தித்தார். இதைச் சகியாத சிறு தாமஸ் தன் தாயிடம்முறையிட, அந்தஅம்மை தம்மகனுக்கு நினிமேல்கௌரவபங்கம் ஏற்படாதிருக்கத் தாமே அவனுக்கு வேண்டியவைகளை மிகவும் அன்புடன் தமது வீட்டிலே போதித்து வந்தார். வறுமையின் கொடுமையால் சிறுவயதிலேயே எடிஸன் ரயில் வண்டிகளில் ஏறிப் பிரயாணிகளுக்கு மிட்டாய் வகைகளையும் தினசரி மாதாந்தப் பத்திரிகைகளையும் விற்றுவந்த இலாபத்தைக் கொணர்ந்து தன் அன்னைக்குக் கொடுத்து வந்தார். ஓய்வுநேரம் ஏற்படும்போது பத்திரிகைகளை உற்று நோக்கி ஊக்கத்துடன் படிப்பார். இவ்வாறு சில தினங்கள் கழிந்தன. இதுவரை சேர்த்த தொகையில் ஒரு சிறு தொகையைக் கொண்டு சில அச்சுகளும் காகிதங்களும் திராவகங்களும் வாங்கித் தாமிருக்கும் ரயில் வண்டியில் ஓர் ஓரத்தில் வைத்துக் கொண்டு தம்மைப்பட ஒருவாரப் பத்திரிகையை அச்சிட்டுப் பிரயாணிகளெல்லோருக்கும் விற்று வந்தார். இப்பத்திரிகையில் அநேகருக்குப் பிரிய முண்டாகி வாங்கிப் படித்தார்கள். இவர் ஒரு பெரி பத்திராதிபர் ஆகியிருக்கக் கூடும். ஆனால் அந்தப் பெரும் பாக்கியம் ஒருநாள் நடந்த விபத்தினால் பாழாயிற்று. ரயில் வண்டியில் தமது பத்திரிகையை அச்சிட்டுக் கொண்டிருக்கும் பொழுது ஒரு திராவக புட்டி தவறி விழுந்து உடைந்ததனால் வண்டியின் கதவும் மற்ற பாகங்களும் தீப்பிடித்துக் கொண்டன. உடனே வண்டியின் அதிகாரி வேண்டிய உதவியுடன் வண்டியை நிறுத்தி நெருப்பை அணைத்து சிறு பையனாகிய எடிஸனை இனிமேல் நம் வண்டியில் அச்சிடவிட்டால் பெரும் விபத்து வரும் என்று எண்ணி அவனைக் கீழே தள்ளிச் சாமான்களையும் எடுத்து வெளியில் எறிந்துவிட்டார். அன்று முதல் பிரயாணிகளுக்கு வேண்டிய மிட்டாய்கள் விற்பதென்றால் மாத்திரம் வண்டியில் ஏற விட்டார்கள்; அச்சிட அநுமதி தரவில்லை.

### தந்தியடிக்கும் வேலை

பின்பு தமது தகப்பனாரிடம் கலந்து ஆலோசித்து, அச்சிடுவதில் தமக்கிருக்கும் ஆவலைக் கூறித் தனியாக ஓர் அறையில் மறுபடியும் அச்சிட ஆரம்பித்தார். அப்பொழுது தந்திக் கம்பி போவதிலும் தந்தி அடிப்பதிலும் ஊக்கமுண்டாயிற்று. தமது வீட்டுக்கும் தமது சிநேகிதர்களின் வீட்டுக்கும் மத்தியில் தந்திக் கம்பி போட்டார். எங்கெங்கு வேலிகளும் வீடுகளும்வந்தனவோ அங்கங்கெல்லாம் கண்ணாடி புட்டிகளுக்குள் கம்பியைச் செலுத்தி மின்சார சக்தி வெளியே ஒருவர் மேலும் படாதபடி தடுத்தார். இவ்வாறு ஓய்வு நேரங்களில் பரிசோதனை செய்வதும் மற்ற நேரங்களில் ரயிலுக்குச் சென்று மிட்டாய் விற்பதுமாயிருந்தார். ஒருநாள் ரயில் ஒன்று வேகமாய் வரும் சமயத்தில், ஸ்டேஷனில் தந்தியடிப்பவரின் சிறு குழந்தையொன்று பிளாட்பாரத்தை விட்டு இறங்கித் தண்டவாளத்தின் மேல் நின்றுகொண்டு விளையாடிக்கொண்டிருந்தது. இதைக் கண்டவர் அனைவரும் யாது செய்வதென்று தெரியாது திகைத்து நிற்க, சிறு வாலிபனான எடிசன் மின்னல்போல் கீழே குதித்துச் சிறு குழந்தையைத் தாவி யெடுத்து வந்து அதன் உயிர் தப்புவித்தார். குழந்தையின் தகப்பனான தந்தியடிக்கும் உத்தியோகஸ்தர் இச் சிறுவனுக்குத் தக்க கைம்மாறு செய்யவேண்டி, அவனைப் போற்றிப் பிறகு தமக்குத் தெரிந்த தந்திச் சமாசாரங்களை அவனுக்குக் கொஞ்சங் கொஞ்சமாகக் கற்பித்தார். இதில் தேர்ச்சி அடைந்த எடிசனுக்கு வாரம் 25 ஷிலிங் சம்பளத்துடன் இரவில் தந்தியடிக்கும் வேலை யொன்று கிடைத்தது. எடிஸன், பகலெல்லாம் தன்வீட்டில் பற்பல பரிசோதனைகளைச்செய்வதிலேயே காலங்கழித்து வந்ததனால் இரவில் மெய்மறந்து உறங்கிவிடுவதுண்டு. இதை அறிந்த மேலதிகாரி இவர் எப்பொழுதும் விழித்துக்கொண்டிருக்க ஒரு ஏற்பாடு செய்ய எண்ணி ஒவ்வோர் அரை மணிக்கும் ஓர் இரகசிய வார்த்தையை அடுத்த ஸ்டேஷனுக்குத் தந்தி மூலமாய் அனுப்பும்படி கட்டளையிட்டார். இதற்காக எடிசன தம்மை அரைமணிக்கு ஒருதரம் எழுப்பும் கடியாரம் ஒன்றைக் கண்டுபிடித்த அதன் உதவியால், சமயத்தில் எழுந்து தந்தியடித்து விட்டு மறுபடியும் தூங்கிவிடுவார். சில தினங்களில், மனித உதவியில்லாது தானகவே அரைமணிக் கொருமுறை அவ்வார்த்தையை அடுத்த ஸ்டேஷனுக்கு அனுப்பும் ஏற்பாட்டைச் செய்துவிட்டுக் கவலையற்று உறங்கினர். இவ்வாறு கஷ்டங்கள் வந்தபோதெல்லாம் ஒரு புதுக் கருவியை உண்டு பண்ணிவிட்டுச் சுகமடைவாரே யொழிய சாமான்ய மானிடர்போல் வீணில் விதியை நொந்து காலம் கழிக்கமாட்டார்.

இவ்வாறிருக்கையில் ஒருநாள் ஒவ்வோர் ஊரிலும் பற்பல பண்டங்களின் விலைகள் இவ்வாறிருக்கிறதென்று வியாபாரிகளுக்கு அவ்வப்போது தந்திமூலமாய்த் தெரிக்கும் அச்சிடும் ஓர் இயந்திரம் கெட்டுப்போயிற்று. அதை எடிசன் சரிப்படுத்திக் கொடுத்ததுடன் புதுவிதமான ஓர் இயந்திரமும் செய்துகொடுத்தார். இதற்கு இவருக்கு 8000 பவுன் வெகுமானம் கிடைத்தது. இப் பெருந் தொகையை வேறு வழிகளில் செலவிடாமல் தமது பரிசோதனைகளை அபிவிருத்தி செய்வதிலேயே செலவழித்தார். அப்பொழுது ஒரு தந்திக்கம்பியின் மூலமாய் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஒருசமயத்தில் ஒரு சமாசாரத்தைத்தான் அனுப்ப முடியும். இவருடைய முயற்சியினால் எதிர் எதிரே ஒரு கம்பியில் இரண்டு செய்திகளை அனுப்பும்படியும் பிறகு நான்கு செய்திகளை அனுப்பும்படியும் ஏற்பாடு செய்து காட்டினர். இதைக்கேட்டவர் அனைவரும் தாமஸ் ஓர் மாந்திரிகனுயிருக்கவேண்டும் என்றே நினைத்தனர்.

### மின்சாரப் பரிசோதனை

அக்காலத்தில் மின்சார விளக்குகளே கிடையா. டேவி என்ற ஆங்கிலேயருடைய பரிசோதனைகளால் இரண்டாயிரம் மின்சார ஸெல்களை உபயோகித்து அச்சக்தியை இரண்டு கரிக்கம்பிகளின் மூலமாய்ப் பிரவேசிக்கச் செய்து அக்கம்பிகளிரண்டும் தொடுமிடத்தில் சிறு சந்திலில் அச்சந்தில் சக்தி செல்லும் பொழுது பெரிய பிரகாசத்தை உண்டாக்கினர்கள். இவ்விதமுண்டாக்குவது மிகவும் செலவானதல்லாமல் இவ்வளவு பிரகாசமான வெளிச்சம் சாதாரணமாய் உபயோகிக்கத் தகுந்ததல்லாமலும் இருந்தது. கண்களைப் பறிக்காததாகவும் விலையில் சரசமானதாகவும் உள்ள ஒரு புதுவித மின்சார விளக்கைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று தாமஸ் எடிசன் முயற்சிசெய்ய ஆரம்பித்தார். கண்ணாடி பல்புகளை யுண்டாக்கி அவைகளுக்குள்ளிருக்கும் காற்றைப் பம்புகளின் உதவியால் வெளியாக்கிப் பல்புகளுக்குள் இலேசான உலோகக் கம்பிகளை அமைத்து அக்கம்பிகளில் மின்சார சக்தியை விட்டால் அவை சூடேறி வெண்ணிறமாகும் பொழுது வெளிச்சமுண்டாகுமென்று எண்ணிப் பல உலோகங்களைச் சோதித்தார். அநேகம் சூடுதாங்காமல் வெந்து சாம்பலாய்ப் போயின. பற்பல வஸ்துக்களைக் கருக்கி அவைகளிலிருந்துவரும் இலேசான கரிக்கம்பி வளையங்களைக் கண்ணாடி பல்புகளுக்குள் செலுத்த வேண்டுமென்று கைக்குக் கிடைத்ததெல்லாவற்றையும் கரியாக்கிப் பார்த்தார். பேனா பென்ஸில், காகிதம், நூல் அட்டை இன்னும் பல பொருள்களையும் இவ்வாறு சோதித்தார். ஒருநாள் இப்பரிசோதனைகளை வேடிக்கை பார்க்கவந்த ஒருவரின் தாடி மயிரைப் பிடுங்கி அதைக் கருக்கி அச்சிறு வளையம்பயன்படுமாவென்று கூடப் பரிசோதித்தார். கடைசியில் ஒரு விசிறியிலிருந்த பிரம்பின் நாரைக் கிழைத்து அதைக் கரியாக்கி, நாற்பத்தெட்டு மணி நேரம் ஓய்வம் அன்னஆகாரமுமில்லாது வேலை செய்து ஒரு விளக்கை யுண்டாக்கி, எரிய விட்டார். இஃது இரண்டு நாள் பிரகாசித்துக் கடைசியில் உள்ளிருக்கும் கரிக்கம்பி சாம்பலாய்ப் போகவே அணைந்து விட்டது. எவ்விடங்களில் நல்ல பிரம்பும் மூங்கில்களும் கிடைக்குமோ வென்று கண்டுபிடிக்க அநேகரைப் பல தேசங்களுக்கு அனுப்பி அவர்கள் கொணர்ந்ததிலிருந்து மின்சார விளக்குகளை விருத்தி செய்தார். தற்காலத்தில் மறுபடியும் டங்ஸ்டன் என்ற ஒரு கடின உலோகத்தைக் கம்பியாக்கிக்கரிக்குப்பதிலாக மின்சார விளக்குகளில் உபயோகிக்கிறார்கள். தம்மூர்முழுவதையும் மின்சார விளக்குகளால் பிரகாசிக்கச் செய்தார். இப் புதுமையைப்பார்க்க ஜனங்கள் மற்ற ஊர்களிலிருந்து திருவிழாக்களைக் காணப் போவது போல் திரள் திரளாய்ச் சென்றனர்.

### கிராமபோன் ஆரம்பம்

இவர் செய்த அநேக வஸ்துக்களில் "போனகிராப்" என்றது தற்கால "கிராமபோனுக்கு" ஆரம்பம். சுழன்று கொண்டிருக்கும் ஒரு மெழுகு தடவிய உருளையின் மேல் எப்பொழுதும்தொடும்படியாக ஓர் ஊசியைவைத்து அதிலிருந்து ஒருபுனல் போன்ற குழா யொன்றை ஏற்பாடு செய்தார். அக்குழாய்க்குள் இவர் பேசினர். அப்பொழுது அவருடைய தொனிக்குத் தகுந்தாற்போல் மெழுகின் மேல் ஊசி பல மேடுபள்ளங்களைத்தொடர்ச்சியாய் உண்டாக்கிற்று. மறுபடியும் ஊசியை ஆரம்பத்தில் வைத்து உருளையைச் சுழல விட்டார். அப்பொழுது அவருடைய குரல் கேட்டது. அப்பொழுது அவருக்குண்டான ஆனந்தத்துக்கு அளவேயில்லை. அவருடனிருந்தவர்கள் ஒவ்வொருவரும் ஓடிவந்து இந்தப் பேசும் யந்திரத்தைக்கேட்டுத் திகைத்துநின்றனர். தற்காலத்தில் இதன் ஒவ்வொரு பாகத்தையும்விருத்தி செய்ததனால் பாட்டுகளும் பேச்சுகளும் கிராமபோனில் தெளிவாய்க் கேட்கின்றன.

இவர் இன்னும் அநேகம் கண்டு பிடித்தார். அவைகளில் சிலவற்றையே கூறயிடமுண்டு. அவை மின்சார ரயில்வே சிக்னல்கள், டெலிபோன், சினிமா, பழங்கள் கெடாத ஏற்பாடுகள் —இவ்வளவும் செய்த நிபுணரின் மரணத்தாலுண்டான நஷ்டம் அமெரிக்கர்களுக்கு மாத்திரமல்ல, மற்ற அனைவருக்குமேயாகும். உலகசுகத்தை விருத்தி செய்த இவருடைய ஆத்மா சாந்தியுடனிருக்க இறைவன் அருள் புரிவனாக.

## விஞ்ஞான உலகம்

### தாமஸ் எடிஸனின் உயில்

#### 24 லட்சம் பவுனுக்கு வழக்கு

தாமஸ் ஆல்வா எடிஸன் என்ற பிரபல சாஸ்திர அறிஞர் இறந்து போகும்போது, இருபத்து நான்கு லட்சம் பவுனுக்கு ஓர் உயில் எழுதி வைத்து விட்டுப்போயிருக்கிறார். தாமஸ் எடிஸனுக்கு இரண்டு மனைவிகள். இரண்டாவது மனைவியின் இரண்டு பிள்ளைகளுக்குமே, தமது சொத்தின் பெரும்பாகத்தை இந்த உயிலின்படி எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கிறாராம். ஆனால் முதல் மனைவியின் மகனான ஸ்ரீமான் வில்லியம் எடிஸன் என்பார், இந்த உயிற் கண்ட சொத்து சுதந்திரம் முதலியன யாவும் தமக்கே சேரவேண்டுமென்றும், இரண்டாவது மனைவியை விவாகம் செய்து கொள்வதற்கு முன்னரே, அவர் பல புதிய ஆராய்ச்சிகளைச் செய்து பெரும்புகழும் பெற்றாரென்றும் காரணங்கள் கூறி வழக்குத் தொடுத்திருக்கிறார்.

### உலகத்தின் இரண்டாவது கூரை

அறிஞர் ஆப்பிள்டன் என்னும் ஒரு விஞ்ஞான அறிஞர் பூமி மட்டத்திற்கு எழுபது மைல் உயரத்தில் கூரை போன்றதோர் ஆகாயப் பரப்பு இருக்கிறதென்று கண்டுபிடித்திருக்கிறார். அறுபது மைல் உயரத்தில் ஒருவித ஆகாயப் பரப்பு இருக்கிறதென்றும், கம்பியில்லாத் தந்தியினின்று எழும் அலைகள் இந்த முதல் பரப்பில் தாக்கிப்பின்னர் பூமி மட்டத்திற்கு வருகிறதென்றும் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது ஆப்பிள்டன் என்பார், அதற்கு அப்பாலும் ஒருவித ஆகாயப் பரப்பு இருக்கிறதென்றும், இதை மிக நுண்ணிய அலைகள் சென்று தாக்குகின்றனவென்றும் கண்டுபிடித்திருக்கிறார்.

## மணித்திரள்

சைனாவில் ஒருவர்க்கொருவர் சிநேகிதம் செய்து கொள்வதென்றால், ஒரு கோப்பையை உடைக்கவேண்டுமாம்.

* * *

ஸ்பெயினில் குடியரசு ஏற்பட்ட பிறகு, அரசாங்க உத்தியோகஸ்தர்களில் பாதி பேர் வேலையினின்று நீக்கப்பட்டு விட்டார்களாம்.

* * *

சமுத்திரத்திற்கு 900 அடிக்குக் கீழேயுள்ள பொருள்களைக்கூட புகைப்படம் எடுக்க முடியும் என்று இப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

* * *

ஆஸ்திரியாவிலுள்ள டெலிபோன் தந்தி இலாகா ஊழியர்கள், தங்கள் சம்பளம் குறைக்கப்பட்டதைக் கண்டிப்பதற்காகச் சத்தியாக்கிரகம் செய்யப்போகிறார்களாம்.

* * *

இப்பொழுது குதிரைப் பந்தயங்கள் நடைபெறுவதுபோல், அமெரிக்காவில் ஆகாய விமானப் பந்தயங்கள் நடைபெற ஏற்பாடுகள் செய்யப்படுகின்றனவாம்.

* * *

அத்லாண்டிக் மகா சமுத்திரத்தில் மட்டும் வருஷந்தோறும் நாற்பது கோடி காட் என்ற மீன்களும் முந்நூறு கோடி ஹெர்ரிங் என்ற மீன்களும் அகப்படுகின்றனவாம்.

* * *

பிரஞ்சு அறிஞர் ஒருவர், மணிக்கு ஐந்நூறு மைல் வீதம் பறக்கக்கூடிய ஓர் ஆகாய விமானத்தைக் கண்டுபிடித்து முடித்துவிட்டாராம். இத்தலியிலும் இதேமாதிரியான ஒரு முயற்சி நடைபெற்று வருவதாக சொல்லப்படுகிறது.

* * *

அரிஸ்டாடல் என்ற கிரேக்க தத்துவ ஞானி வசித்திருந்த காலத்தில் 115 விதமான மீன்களே கண்டுபிடிக்கப்பட்டிருந்தன. இப்பொழுது இருபதினாயிரம் விதமான மீன்கள் இருப்பதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன.

* * *

ஐரோப்பிய மகாயுத்தத்தின் போது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைச் சேர்ந்தவர்களில் கொல்லப்பட்டவர்கள் தொகை 1089919. நேச தேசங்கள் 2477 683 பேரை இழந்தன. ஜர்மனியும் அதைச் சேர்ந்த தேசங்களும் 3651690 பேரை இழந்தன.

* * *

வியன்னாவில்வசிக்கும் லூன்டோபாக்என்னும் மங்கை, நாய்கள் வளர்ப்பதில் அதிக பிரியமுள்ளவள். இவளிடம் பல ஜாதி, பல உருவங்களைக் கொண்ட ஆயிரம் நாய்கள் இருக்கின்றனவாம். இவளிடமிருந்து நாய்கள் வாங்குவதற்கு உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் பலர் இவளிடம்வருகின்றனர்.

* * *

அமெரிக்காவிலுள்ள லங்காஸ்டர் என்னும் ஊரில் முப்பத்தேழு வயதுள்ள சார்லஸ் காம்பெல் என்பான் குட்டிச்சாத்தான் போன்ற சில்லரை தேவதைகளின் வசப்பட்டவனும். இவன் ஒருநாள் மேற்படி தேவதைகளின் வார்த்தையைக் கேட்டு, தன் வீட்டையே நெருப்புக் கிரையாக்கிவிட்டான்.

* * *

இங்கிலாந்திலுள்ள அரசாங்க ரசாயன ஆராய்ச்சி சாலையார் பல விநோத காரியங்களைச் செய்கின்றனர். தபால் முத்திரைகளுக்குப் பின்னால் தடவப்பட்டிருக்கும் பசையில் விஷப்பொருள்கள் ஒன்றும் கலந்தில்லையே யென்று பரிசோதனை செய்யும்படி இவர்கள் அரசாங்கத்தாரால் கேட்கப்பட்டனராம். ஏனெனில் தபால் முத்திரைகளை நாவில் நக்கி அப்படியே ஒட்டுவது வழக்கமல்லவா?

### பூமியைவிட ஐந்து மடங்கு பெரிய கிரகம்

#### புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது

அமெரிக்க வான சாஸ்திரியான ஸ்ரீமான் வில்லியம் எச். பிக்கரிங் என்பார் புதியதொரு கிரகத்தைக் கண்டுபிடித்திருக்கிறார். இது "நெப்ட்யூன்" கிரகத்திற்கும் அப்பால் உள்ளதாம். இது சூரியனைச் சுற்றி ஒன்பது கோடி மைல் தூரத்தில் வட்டமிடுகிறது. இதன் சுற்றளவு பூமியைவிட ஐந்து மடங்கு பெரியது. இந்தப் புதிய கிரகம், ஒரு தரம் சூரியனைச் சுற்றிவர 656 ஆண்டுகள் ஆகின்றன.



## சென்னை அலங்காரம்

விநோதம்—நட: கடற்கரை

சூரிய தேவன் என்னைத் தட்டி எழுப்பினவுடன் எழுந்து ஸ்நானம், பானம் முதலியவைகளை முடித்துக் கொண்டேன். நான் காபி சாப்பிடுவது வழக்கமே கிடையாது. ஆனால் பட்டணத்திற்குச் சென்று, யார் வீட்டுக்கேனும் போனால், முக்கியமாகக் காபி ஹோட்டலுக்குள் நுழைந்தால்,காப்பி சாப்பிடும் பழக்கமில்லை என்று சொல்லி விடுங்கள்; உடனே உங்களை ஏற இறங்க விழித்துப்பார்க்கிறார்கள். அந்தப் பார்வையிலே, ஏளனம், வெறுப்பு, இப்படியும் ஒரு மனுஷ்யப் பிரகிருதி உண்டா என்ற ஒரு பரிதாப உணர்ச்சி ஆகிய அனைத்தும் அடங்கி யிருக்கின்றன. பிறகு அவர்கள் நம்மிடத்தில் பேசுந் தோரணையே மாறிவிடுகிறது. ஆ! ஆ! காபிக்கு உள்ள மகத்துவம்தான் என்னே! காபி குடிப்பவர்களைப் பார்த்து "சார்" என்று அழைக்கிறார்கள்; குடியாதவர்களைப் பார்த்து "என்ன ஐயா!" என்று ஒருவித அலட்சிய தோரணையில் அழைக்கிறார்கள். காபி குடிப்பதில் எத்தனையோ நினுசுகள் உண்டு என்று பட்டணம் போன பிற்பாடுதான் தெரிந்து கொண்டேன். டம்ளரின் மூன்றில் ஒருபாகமாவது வாய்க்குள்ளே செல்லுமாறு குடிக்க வேண்டும். அப்படிச் சீப்பிக் குடிப்பது தான் அதி கௌரவம். அதிலும் உறிஞ்சிக் குடிக்க வேண்டும். அப்பொழுதுதான் காபியின் ருசியை அநுபவிக்க முடிகிறதாம். பட்டணத்து நாகரிக கனவான்கள் உறிஞ்சிக் குடிப்பதைப் பார்த்து நம் ஊரில் காளை மாடுகள், தொட்டிகளில் இருக்கும் புளிச்சத் தண்ணீரை மிகுந்த ஸ்வாரஸ்யமாய் உறிஞ்சிக் குடிப்பது நினைவுக்கு வந்தது. இங்ஙனம் சீப்பிக் குடிக்கிறவர்கள், முதல் டிக்ரி பெரிய மனிதர்கள். ஸ்பெஷல் டிக்ரி பெரிய மனிதர்கள் வேறே இருக்கிறார்கள். இவர்கள் காபி அல்லது வேறே குளிர்ந்த பானம் முதலியவைகளைச் சாப்பிட வேண்டுமானால், அந்த டம்ளரிலே ஒரு சிறிய மூங்கிற் குழாய் போட்டிருக்கும். அதைப்பிடித்துக்கொண்டு, மெது மெதுவாய் மூச்சை இழுப்பதன் மூலம் காபியையும் உள்ளே இழுத்து வாயில் மொத்தமாகச் சேர்த்துக் கொண்டு, பிறகு தொண்டைக்குள் சேர்ப்பிக்கிறார்கள். காபி குடியிலே இந்த "நாகரிக முறை" சமீபகாலத்தில்தான் தோன்றியிருக்கிறதாம். சிலர்நின்று கொண்டே குடிக்கிறார்கள்; சிலர் உலாவிக் கொண்டே பானஞ் செய்கிறார்கள்; இவை ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நினுசான ருசி இருக்கிறதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். பட்டணத்துக் காபியிலே ரொம்ப கசப்பு இருக்கிறது. காபிதூளில் பலவித கலப்புகளைச் சேர்த்துவிடுகிறதாகச் சொல்கிறார்கள். சிக்கரி தூளைக்கூட சேர்த்துவிடுகிறார்களாம்! எவ்வளவுக்கெவ்வளவுகசப்பாகக் குடிக்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நாகரிக அந்தஸ்தும்உயர்கிறதாம்! காபிதண்ணீரில் வெல்லத்தைக் கரைத்துக் குடித்தால் அஃது அநாகரிகமாக மட்டும் கருதப்படுவதில்லை; காட்டுமிராண்டித்தனமுமாகக் கருதப்படுகிறது. நாட்டுச் சர்க்கரை அல்லது பழுப்புச்சர்க்கரையை உபயோகித்தால் அது முட்டாள்தனமாக எண்ணப்படுகிறது. பூரா சர்க்கரை என்கிற வெள்ளைச் சர்க்கரையை உபயோகித்தால் அஃது அரை நாகரிகமாகக் கூறப்படுகிறது. அஸ்கா சர்க்கரை என்கிற மணல் சர்க்கரையை உபயோகிப்பதுதான் மிகுந்த நாகரிகம்; கௌரவம். ஹோட்டல்களிலேயுள்ள பரிசாரகர்கள், இந்த காபியை ஆற்றும் மாதிரியே ஓர் அழகு. எவ்வளவுநாள் கஷ்டப்பட்டு இந்த வித்தையைக் கற்றார்களோ தெரியவில்லை அப்படி ஆற்றிக்கொண்டிருக்கும்போது நுரைவரவேண்டும். அந்த நுரையுடன் குடித்தால்தான், உள்ளேபோயிருக்கும் கனபதார்த்தங்கள் ஜீரணமாகுமாம். 'காலரா, பிளேக்' முதலிய ஆண்குழந்தைகளையும், க்ஷயம் என்கிற பெண்குழந்தையையும் பெற்றெடுத்த மகாதேவியானவள். காபி தேவனை மணந்துகொண்ட பின்னர்தான் அவளுக்கு இந்தச் சந்தான பாக்கியம் ஏற்பட்டதாகச் சொல்லிக்கொள்கிறார்கள்.

* * *

ஏதோருவிதமாகக்காபிக்குடித்துவிட்டு, எங்கெந்த இடங்களுக்குச்சென்று என்னென்ன பார்ப்பதென்பதைப்பற்றி ஆலோசித்துக்கொண் டிருந்தேன். பக்கத்திலே இருந்த சிலர் "பீச்சு"க்குப் போகலாமா வென்பதைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். முதலில் பீச்சு என்றால் என்னவென்று எனக்குச் சரியாகப் புரியவில்லை. பிறகு கடற்கரை என்று, அவர்கள் பேசிக்கொண்டிருக்கிற மாதிரியிலிருந்து தெரிந்துகொண்டேன். நானும் கடற்கரை சென்று உலாவி விட்டு வருவதாகத் தீர்மானித்தேன். மத்தியானச் சாப்பாட்டை முடித்துக்கொண்டேன். ஹோட்டல்களில் சாப்பாடு போடும் விதமே அதிசயமா யிருக்கிறது. சமைத்த பதார்த்தங்களை இலையில் வைக்கும் அளவையும், சாதத்தைச் சிறிது சிறிதாக, போதுமா, போதுமா வென்று கேட்டுக் கொண்டே பரிமாறும் மாதிரியையும் பார்த்தால் நமக்கு உடனே வயிறு நிரம்பி விடுகிறது. எதையும் நாமாக வலிந்து கேட்டாலன்றிப்பரிமாறமாட்டார்கள். முக்கியமாக நெய்யைப் பரிமாறும் நினுசு ஒன்றே போதும். சாப்பிட்டவுடனே பசி எடுக்கக் கூடிய அதிசயத்தைப் பட்டணத்து ஹோட்டல்களில் காணலாம். மற்றும் தொடர்ந்தாற்போல் ஒரு மாதம் ஒருவன் ஹோட்டலில் சாப்பிடுவானேயாகில், "உடற்சுருக்கிஞானம் பெருக்கும் ஞானியாவான்" என்பதில் ஐயமில்லை. இது நிற்க. சாயந்திரம் நான்கு மணிக்கே கடற்கரை சென்று விட்டேன். அப்பொழுது அங்கே அதிகமான ஜனநடமாட்டம் காணோம். கடற்கரை ரஸ்தாவோமிக அகலமானது. இங்கே "மரீனா" என்று இஃது அழைக்கப்படுகிறது. உலகத்திற்குள்ளேயே, இவ்வளவு அழகான கடற்கரைப் பிரதேசம் வேறெங்கும் இல்லையென்று சொல்லிக்கொள்கிறார்கள். நான் முதலில் சமுத்திர அலைபடியும் கடலோரமாகச் சென்றேன். ஆ! ஆ! என்ன அழகு! அலையானது மிகுந்த கோபாவேசத்துடன், ஆரவாரம் செய்துகொண்டு, கரையை வந்து மோதுகிறதும், உடனே திரும்பிப் போவதுமாக இருக்கிறது. இதற்கு ஒப்பவையே காணோம். சிறு பிள்ளைகள் கிளிஞ்சல் பொறுக்கிறார்கள்; மணல் வீடு கட்டுவதும், குளம் பறிப்பதும், கால்மேல் ஈரமணலைக் கூட்டி, பின்னர் அதை இழுத்துவிட, அது கூடுமாதிரியாவதும் சிறு குழந்தைகளின் விளையாட்டுகள். தண்ணீர் ஓரமாக, கட்டுமரங்களின் கட்டைகள் வரிசை வரிசையாக வைக்கப்பட்டிருக்கின்றன. சமுத்திர ராஜனோடு போராடித் தோற்றுச் சோர்ந்து வீழ்ந்து போன வீரர்களைப் போல் இந்தக் கட்டைகள் இருக்கின்றன. வலைகள் குவியல் குவியலாக வைக்கப்பட்டிருக்கின்றன. உட்கார்ந்திருப்போரும், சாய்ந்திருப் போரும், படித்துக்கொண்டிருப்போரும், நன்றாக நித்திரை புரிவோருமாகப் பலர் இங்கே வீற்றிருக்கிறார்கள். வீற்றிருப்பவர்களுடைய பசியை ஆற்றுவதற்காக, சுண்டல், பட்டாணி முதலியவைகளும் இங்கே விற்கப்படுகின்றன. இந்தக் காட்சிகளை யெல்லாம் பார்த்துக்கொண்டு ரோட்டு பக்கம் வந்தேன்.

* * *

ரோட்டிலே எத்தனை விதமான ஜனங்கள் நடமாடுகிறார்கள்! எதிரிலே எவ்வளவு பெரிய பெரிய கட்டிடங்கள்; கீழ்ப்பக்கம் அழகான சமுத்திரக் காற்று வீசுகிறது! மேற்பக்கம் சாயங்கால சூரியன் காய்கிறான்! இதுதான் மோட்ச உலகம். அப்படித் தனியாக ஒன்று இருந்தாலும் அஃது இதை விடச் சிறப்பாக இராது. பீச்சிலேயே, கால் நாகரிக, அரை நாகரிக, முக்கால் நாகரிக, முழுநாகரிக புருஷர்கள்பலரேயும் பார்க்கலாம். இடுப்பிலே வேஷ்டி, மைலே கோட், தலையிலே தலைப்பாகை, நெற்றியிலே சந்தனம் அல்லது நாமம்; இது கால் நாகரிக அலங்காரம். இடுப்பிலே ஒற்றைச்சுற்று வேஷ்டி, மேலே 'டென்னிஸ் காலரு' டன்கூடிய 'ஓபன்' கோட், கிராப் தலை, கையிலே 'ரிஸ்ட்வாட்ச்'; இஃது அரை நாகரிகம். காலிலே பூட்ஸ் நிஜார் முதலியன, மேலே கோட், தலையில் தலைப்பாகை இது முக்கால் நாகரிகம். இங்கே தலைமட்டும் நாகரிகமாகவில்லை. ஐரோப்பியர்கள் மாதிரியே, ஹாட், பூட், சூட் எல்லாமுடையது முழு நாகரிகம். இந்த முழு நாகரிகப்பேர் வழிகளே பீச்சில் அதிகமாகத் தரிசனம் கொடுக்கிறார்கள். இவர்கள் பார்க்கிற பார்வையில், எல்லாவற்றையும் தெரிந்து கொண்டிருப்பதான எண்ணம் ஜ்வலிக்கிறது. இவர்களுடைய நடையிலே காணப்படும் கம்பீரம் உலகளந்த பெருமாளுக்குக்கூட இருந்திரா தென்று நினைக்கிறேன். இன்னும் சில பெரிய மனிதர்களிடத்தில், கையிலே பிரம்பு பிரகாசிக்கிறது. பின்னால் நாய் ஓடி வருகிறது. சிலர் தங்கள் மனைவிமார்களுடன் அல்லது மனைவிமாராகக் கருதப்பட்டவர்களுடன் கை கோத்துக்கொண்டு அன்ன நடை நடந்துசெல்கிறார்கள். இது நிற்க. முன்னே கூறின நான்கு வித நாகரிகவர்க்கத்திலும் சேராத சில வர்க்கங்கள் இருக்கின்றன. சிலர், வைதிக முறையில் வேஷ்டி கட்டிக்கொண்டு, மேலே நீண்ட அங்கி (லாங்கோட்) தரித்து, தலையிலே சரிகை தலைப்பாகை கட்டி, நெற்றியிலே பரிமளச்சாந்துப் பொட்டிட்டு, கையிலே வெள்ளிப்பூண்போட்ட பிரம்பு பிடித்து காட்சி தருகிறார்கள். இவைகளுடன், மேனாட்டுச் சாக்காகிய, பூட்ஸையும், ஸ்டாக்கிங்ஸையும் அணிந்து கொள்கிறார்கள். இஃதென்ன நாகரிகமோ தெரியவில்லை. இன்னும் சிலர், சூட், பூட் முதலியவைகளை அணிந்துகொள்கிறார்கள். ஆனால் தலையிலே கிராப்; தலைப்பாகை அணிவதில்லை. நெற்றியிலேசாந்துப்பொட்டு, காதிலேவெள்ளைக்கல் கடுக்கன். இவர்களுடைய நாகரிகம் கழுத்துக்குக் கீழே தான் போலும்! இன்னும் சில விநோத புருஷர்களையும் தரிசனம் செய்தேன். முன்னே கூறிய முக்கால் நாகரிக புருஷர்களைப் போல் வேஷந் தரித்துக் கொண்டு, மேலே ஓர் அங்க வஸ்திரத்தை உத்தரீயமாகப் போட்டுக் கொள்கின்றனர். இந்தப் பேர் வழிகளை எந்த நாகரிக வர்க்கத்தில் சேர்ப்பது! ஜன கணிதம் எடுக்கும்போது, நாகரிக விசேஷங்களைப் பற்றியும், இன்னின்ன வர்க்கத்தில் இன்னின்னார் சேரத் தகுதியுடையவர் என்பது பற்றியும் குறிப்பிட்டால் நல்லதென்று தோன்றுகிறது. ஏனென்றால் அப்பொழுது தான் நாகரிகம் எவ்வளவு தூரம் வளர்ச்சியடைந்து வந்திருக்கிறதென்று தெரியவருமல்லவா?

* * *

கடற்கரையில் உலாவ வரும் பெண்மணிகள் செய்துகொண்டிருக்கும் அலங்காரங்களோ வருணனைக்கு எட்டாதனவா யிருக்கின்றன. தங்கள் கறுப்பைச் சிலர் பவுடர் போட்டு மறைத்துக்கொள்கிறார்கள்; விகாரமான பார்வையைக் கண்ணாடிபோட்டுமறைக்கிறார்கள். தங்களுடைய ஏழ்மைத்தனத்தைக் கராச்சி சில்க் புடவையினால் மறைத்துக் கொள்கிறார்கள். பீச்சுக்கு வந்தவுடன் இவர்கள் நடையே மாறிவிடுகிறது. "இமிடேஷன் டைமண்ட்" தோடையாவது போட்டுக் கொண்டு, வைர நகைகளைப் போட்டிருப்போரைத் தோற்கடித்து விடுகிறார்கள். நாகரிகம் படைத்தவர்கள்தான் இவர்களுடைய நாகரிகத்தை வருணிக்கவேண்டும். எனக்கென்ன தெரியும்! இப்படியே இந்தக்காட்சிகளை யெல்லாம் பார்த்துக்கொண் டிருக்கையில் அஸ்தமித்துவிட்டது. திடீரென்று விளக்குகள் போட்டார்கள். இதற்கு எங்கே எண்ணெயோ? திரி எங்கேயோ? எப்படி ஏற்றுகிறார்களோ? தெரியவில்லை.

"வருணன்"

## சந்தை இரைச்சல்

"காட்டான்" கேட்டது

அலகாபாத் சர்வகலாசாலையார், பரத நாட்டியத்தில் தேர்ந்தவர்களுக்குச் சன்மானங்கள் அளிப்பதாகத் தீர்மானித்திருக்கிறார்களாம். இதைவிட, அரசியல் மேடையில் சமயத்திற்குத் தக்க வேஷம் போட்டு நாட்டியம் செய்வோருக்குப் பரிசுகள் அளிப்பதாக ஏற்பாடு செய்தால் நன்றாயிருக்கும். ஏனென்றால் அதில் தமிழ்நாட்டார் வெற்றி பெறுவர் என்பது திண்ணம்.

* * *

இண்டோர் சமஸ்தானத்தின் மாஜி மந்திரியான ஸ்ரீமான் சியாமசுந்தரலால் என்பார் இறந்துபோன அரைமணி நேரத்திற்கெல்லாம் அவருடைய மனைவியும் இறந்துவிட்டாராம். இத்தமாதிரியான சம்பவங்கள் இப்பொழுது நாட்டில் சிறிது அதிகமாக நடைபெற்று வருகின்றன. வில்லிங்டன் பிரபு, எங்குத் தமது விசேஷ அதிகாரத்தைப் பிரயோகித்து, இவைகளைத் தடுத்துவிடுவாரோ என்று பயமா யிருக்கிறது.

* * *

ஜெயிலுக்குக் 'கிருஷ்ண ஜன்ம ஸ்தானம்' என்று ஒரு பெயர் உண்டு. டெல்லியில் காங்கிரஸ் தொண்டு செய்துகொண் டிருந்த ஸ்ரீமதி நிகி தேவி என்பார், இராஜத்துரோகமான ஒரு பாட்டைப் பாடியதற்காக ஆறு மாத சிறைவாசத்தை யடைந்தார். ஒரு பாட்டுக்கு ஆறு மாதம் கிருஷ்ண ஜன்ம ஸ்தான வாசம்! சங்கீதத்துக்கு நல்ல ஆதரவு!

* * *

ஐரோப்பா கண்டத்திலுள்ள ரைன் நதிக் கரையில் பதினறு வயதுடைய ஒரு சிறு பெண் திடீரென்று காணாமற் போய்விட்டாள். இவள் பிறகு எட்டுவருஷங் கழித்து கண்டுபிடிக்கப்பட்டாள். இவள் தாயார் களியாட்டங்களில் அதிக விருப்பமுள்ளவளாம். தனது பெண், இவைகளுக்கு இடையூறாயிருக்கிறாளென்று சொல்லி எட்டுவருஷ காலம்வரை அவளை ஓர் அறையில்பூட்டிவைத்திருந்தாளாம்! மாமியாரின்கீழ் கஷ்டப்படுவதாகக் கூறிக் கண்ணீர் விட்டழும் மாட்டுப் பெண்கள், இந்தச் செய்தியைக்கேட்டு ஆறுதலடைவார்கள் என்பது நிச்சயம்.

* * *

ருமேனியாவில் சமீபத்தில் ஒரு தேர்தல் நடைபெற்றது. தோல்வி யடைந்தவர் வெற்றிபெற்றவர் மீது வன்மங்கொண்டு, அவரைத் துப்பாக்கிச் சண்டைக்கு அழைத்தார் இதற்கு ஒரு மத்தியஸ்தரும் ஏற்பாடு செய்யப்பட்டார். கடைசி சமயத்தில், இருவருடைய துப்பாக்கிகளும் விதிப்படி இல்லையென்று கூறிவிட்டார். எனவே சண்டையும் நின்றுவிட்டது. மாண்டேகு செம்ஸ்பர்ட் சீர்திருத்தச் சட்டத்தின் கீழ்ச் சென்னையில் நடைபெற்ற முதல் தேர்தலின் போதுகூட, துப்பாக்கி, துணைக்கருவியாகக் சொல்லப்பட்டது வோர்களுக்கு நினைவிருக்கும். இவ் விஷயத்தில் இந்தியாவிலிருந்து ருமேனியா கற்றுக்கொண்டதா? ருமேனியாவிலிருந்து இந்தியா கற்றுக் கொண்டதா?

* * *

பார்சிலோனா என்ற நகரத்தில் திருட்டு பயம் அதிகமாம். இதனால் அஸ்தமித்ததும், வண்டிக்காரர்கள் வண்டி யோட்ட மறுக்கிறார்களாம். அவ்வூரிலுள்ள நகரசபை பிரதாக்கள் இதனால் இராக்காலங்களில் நிம்மதியாகத் தூங்குவார்கள் என்பது நிச்சயம்.

* * *

உலகத்திலேயே பணக்கஷ்டம், வேலையில்லாத் திண்டாட்டம் முதலியன இருப்பதாகக் கூறுகிறார்கள். ஆனால் கிண்டி குதிரைப் பந்தயத்திற்குச் செல்லும் ஜனக்கூட்டத்தைப் பார்த்தால் இவை பொய்யோவென்று தோன்றுகிறது!

* * *

கிண்டியில் குதிரைப் பந்தயத்தை ஸ்தாபிக்கும் புண்ணிய கைங்கரியத்தை ஏற்றுக்கொண்ட லார்ட் வில்லிங்டன் இராஜப் பிரதிநிதியாக வந்திருப்பதைப் பாராட்டி குதிரைப் பந்தயத்திற்குச் செல்வோர் ஒரு தீர்மானம்நிறைவேற்றப்போகிறார்களாம். இவர்களுடைய இராஜபக்தியைப் பாராட்டி வில்லிங்டன் பிரபு பதிலளிப்பாரென்பது நிச்சயமல்லவா?

* * *

முத்தண்ணக்கள் சபையில் வரவு செலவு மசோதா நிறைவேறிவிட்டது! ஜனப்பிரதிநிதிகளுடைய ஆதரவைக் கொண்டுதான் புதிய வரிவிதிகள் விதிக்கப்படுகின்றன என்று ஸர் ஜார்ஜ்ஷுஸ்டர் இனிக் கூசாமற் கூறலாமல்லவா? இந்த மசோதாவுக்குச் சாதகமாக வாக்குக்கொடுத்த கனவான்கள், வாக்குக்கொடுக்கும்போது, புதியவருஷத்துப் பட்ட ஜாபிதாவைப்பற்றிக் கனவு கண்டுகொண்டே இருந்தார்களாம்.

* * *

தாயார்:—பெண்ணே! நீ அவனை முதலில் கல்யாணம் செய்துகொள்ளுகிறேனென்று சொல்லி இப்பொழுது என் மாட்டேனென்கிறாய்?

பெண்:—அவன் தனக்குக் கலெக்டர் உத்தியோகம் என்று சொன்னான். அதனால் சரியென்றேன். பிறகு பார்த்தால் அவன் பில்கலெக்டர் என்று தெரிந்தது.

மனைவி:—நாதா! ஏன் இவ்வளவு நேரம் கழித்து வருகிறீர்கள்? உங்களுக்காக நான் எவ்வளவு நேரம் காத்துக்கொண்டிருப்பது?

கணவன்:—நீ தூங்கின பிற்பாடு வரவேண்டுமென்று நான் எவ்வளவுநேரம் திண்ணையில் காத்துக்கொண்டிருப்பது?

* * *

நண்பன்:—இரவில் எனக்குத் தூக்கமே வருவதில்லை.

மற்றொரு நண்பன்:—ஏன்? உன் மனைவியோடு பேசிக்கொண்டிருப்பதுதானே!

நண்பன்:—நான் பேச ஆரம்பித்தால் அவள் குறட்டைவிட ஆரம்பிக்கிறாளே!

* * *

ஒரியனுக்கு ஒருபொருட்காட்சிச்சாலையின் அதிபதி உத்தியோகம் கிடைத்தது. உத்தியோகம் கிடைத்த சந்தோஷத்தினால் தன் மாமனாருக்குப் பின் வருமாறு கடிதம் எழுதினான்:—"நான் இப்பொழுது ஒரு பொருட்காட்சிச் சாலையின் தலைவனாகி விட்டேன். ஆதலால் நீங்கள் இனி உங்கள் பெண்ணைத் தாராளமாக என்னிடம் அனுப்பலாம். அவளை நான் சரியாகப் பாதுகாத்து வருகிறேன்."

* * *

ஐயன்:—ஸ்ரீமான் செல்வர் இறந்துவிட்டாராமே. நீங்கள் கேள்விப்பட்டீர்களா?

அப்பன்:—கேள்விப்பட்டேன். ரொம்ப விசனமா யிருக்கிறது.

ஐயன்:—அவர் உங்கள் பாத்தியமா என்ன?

அப்பன்:—இல்லை. அதற்காகத்தான் விசனிக்கிறேன்.

* * *

ஒரு மோடார் கம்பெனியின் ஏஜண்ட், ஒரு விவசாயியைப் பார்த்து மோடார் வண்டி யொன்று வாங்கும்படி வற்புறுத்தினான்.

விவசாயி:—அதை விட ஒரு பசு வாங்கினாலும் நல்லது.

ஏஜண்ட்:—பட்டணத்திற்குச் செல்லும்போது பசுவின் மீதா ஏறிக் கொண்டு செல்வாய்? உன்னை முட்டாளென்றல்லவோ கருதுவார்கள்.

விவசாயி:—இருக்கலாம். ஆனால்மோடார் மீது ஏறிக் கொண்டு அதைப் பால் கறக்க ஆரம்பித்தால் அதைவிட முட்டாளாகக் கருதப் படமாட்டேனா?

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1931ஞு டிசம்பர்மீ 2உ

## காந்தியடிகள் உறுதி

வட்டமேஜை மகா நாட்டின் முடிவைப் பொதுவாக உலகமும் சிறப்பாக இந்தியாவும் பேராவலோடு எதிர் நோக்கி நிற்கின்றன என்று நாம் பன்முறையுங் கூறியிருக்கிறோம். இப்பொழுது அம்முடிவு தலைகாட்டி வருகிறது. எல்லாம் பிரதம மந்திரியின் அறிக்கையை யொட்டியே இருக்கின்றன என்று எங்கணும் பேசப்படுகிறது. அவ்வறிக்கை இன்று வெளியாயிருக்குமென்று நம்புகிறோம்.

அறிக்கை வெளியீட்டுக்கு முன்னர்ப் பலபிரதிநிதிகள் தங்கள் தங்கள் கருத்தைத் தெரிவித்தார்கள். இந்தியப் பிரதிநிதிகளுக்குள், மத்திய அரசியல் பொறுப்பு வேண்டுமென்பதில், பெரிதுங் கருத்து வேற்றுமை தோன்றியிருப்பதாகத் தெரியவில்லை. அவ்வொன்றில் பெரிதும் ஒன்றிய கருத்தே வெளி வந்திருக்கிறது.

மகாநாட்டில் மகாத்மா காந்தி பேசிய முடிவுரை பொன்னேபோல் போற்றற்குரியது. மகாத்மாவின் மணிமொழிகள் நடுநிலையிலுள்ள நீதிபதியின் தீர்ப்புப் போலிருக்கின்றன. அடிகள் இங்கிலாந்தினிடத்தில் காய்தலும் இந்தியாவினிடத்தில் உவத்தலுங்கொண்டு பேசியிருக்கிறாரில்லை. நடு நிலையை உயிரணியாக் கொண்டே அவர் பேசியிருக்கிறார்.

காந்தியடிகள், மகாநாட்டில் நிகழ்த்திய சொற்பெருக்கில் கவனிக்கத்தக்க பொருள்கள் பலவுண்டு. அவைகளிற் சிலவற்றை ஈண்டுக் குறித்தல் நலமென்று தோன்றுகிறது. அவைகள், பிரதம மந்திரியின் அறிக்கைக்குப் பெருந்துணைசெய்திருக்குமென்றுங் கூறலாம். காந்தியடிகளிடத்தில் நம்பிக்கை கொண்டு, அவர் கூறிய நியாயமொழிகளை யொட்டிப் பிரதம மந்திரியின் அறிக்கை வெளிவரின், இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் உறவுநீடி காலம் நிலைத்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

காந்தியடிகள் தமது பேச்சில், காங்கரஸ் ஒன்றே இந்தியாவின் பிரதிநிதி சபை என்று குறிப்பிட்டிருக்கிறார். இதை எவரும் மறுத்தல் முடியாது. மற்றுமோரிடத்தில் 'என்னைப் பார்க்கிலும் காங்கரஸ் பெரியது. அதனை நம்புங்கள்' என்னுங் கருத்துப் படவும் பேசியுள்ளார். இந்தியாவின் பிரதிநிதி சபை காங்கரஸ் ஒன்றே என்பது பிரதமமந்திரிக்குந் தெரியும். தெரிந்தாலும் காங்கரஸ் கோரிக்கைக்கு முற்றும் இணங்க மனங்கொள்ளுதற்கு மட்டும் அவர் தியங்குகிறார் போலும்!

சமாதானத்தையே விரும்புவதாக மகாத்மா சொல்கிறார். தம்மால் கூடிய வரை சமாதானத்தை நிலைபெறுத்தவே முயன்று வருவதாக அவர் கூறுகிறார். முடியாவிடின் அதாவது பிரிட்டன் காங்கரஸ் கோரிக்கைக்கு இணங்கி வாராவிடின் சட்டமறுப்பியக்கம் தொடங்கப்படுமென்று காந்தியடிகள் தெரிவிக்கிறார். இங்கே இணங்கி வரவேண்டியவர் யாவர்? பிரதம மந்திரியா அல்லது காந்தியடிகளா என்பதை நேயர்கள் கவனிப்பார்களாக.

பாதுகாப்புகளைப்பற்றிக் காந்தியடிகள் பேசுகையில், அவைகள் இந்தியாவின் நலனுக்குக் கேடு சூழ்வனவாக இருத்தலாகாதென்றும், அவ்வாறே இங்கிலாந்துக்குத் தீங்கிழைக்கும் பாதுகாப்புகளும் வேண்டுவதில்லையென்றும் குறிப்பிட்டுள்ளார். காந்தியடிகள் மகாநாட்டில் ஓர் அறவோராகவே நின்று கடனாற்றி வருகிறார். பிடிவாத அரசியல் சூழ்ச்சியே அவரிடம் தலை காட்டவில்லை. பாதுகாப்பில் ஒருவரையொருவர் நம்புதல்வேண்டும். நம்பிக்கை ஏற்படும்வரை பாதுகாப்புகளில் நீதி பிறத்தல் அரிதே.

புரட்சி இயக்கத்தைப்பற்றியுங்காந்தியடிகள் பேசாமலில்லை. புரட்சி இயக்கத்தைத் தாமோ காங்கரஸோ ஆதரிக்கவில்லை யென்று அடிகள் கூறுகிறார். புரட்சியியக்கத்தைக் காந்தியடிகளோ காங்கரஸோ ஆதரிக்கவில்லையென்பது அரசாங்கத்தார்க்கே தெரியும். தேசம், காந்தியடிகள் - காங்கரஸ் வழி நிற்கிறதா புரட்சிக்காரர் வழி நிற்கிறதா என்பதை அரசாங்கத்தார் ஆய்ந்து ஓய்ந்து பார்ப்பாராக. காந்தியடிகட்கும் காங்கரஸுக்கும் தேசத்தில் ஏற்பட்டுள்ள செல்வாக்கை மலைக்குக் கடலுக்கும் ஒப்பிடலாம். புரட்சி இயக்கத்தின் செல்வாக்கை எதற்கு ஒப்பிடுவது? அணுவிற்கும் திவலைக்குங்கூட ஒப்பிடல் முடியாது. ஆகவே மின்மினிபோன்ற புரட்சி இயக்கத்தை மனதிற் கொண்டு பாதுகாப்புகளில் கட்டுப்பாடு நாடுவது சிறப்பாகத் தோன்றவில்லை. பிரதம மந்திரி, காந்தியடிகளிடத்திலும் காங்கரஸினிடத்திலும் நம்பிக்கை கொண்டு கடனாற்றினால் இங்கிலாந்துக்கும் நலனுண்டு; இந்தியாவுக்கும் நலன் விளையும்.

சிறுபான்மையோர் விடயத்தையும் காந்தியடிகள் மறந்தாரில்லை. அந்நிய ஆட்சியுள்ளவரை சிறுபான்மையோர் விடயத்தில் ஒன்றிய முடிவு காண்டல் அருமை என்று அடிகள் சுருக்கச் சொல்லியது சிந்திக்கற்பாலது. சிறுபான்மையோர் பெரும்பான்மையோரைச் சந்தேகிப்பது எப்பொழுது ஒழியும்? சுயேச்சை பெற்றாலன்றி ஒழியாது என்பது மகாத்மாவின் கருத்து. அதிகாரவர்க்க ஆட்சிமுறையில் சாதி நினைவும் வகுப்பு நினைவுமே பெரிதுந்தோன்றுகின்றன. அந் நினைவுகளைத் தேசத்தின் மீது செலுத்தும் ஆற்றல் அதிகார வர்க்கத்துக்கில்லை என்பது செவ்வனே விளங்கிவிட்டது. ஆகவே இந்தியாவிற்கு இப்பொழுது வேண்டற்பாலது சுயராஜ்யம் என்று சொல்ல வேண்டுவதில்லை.

காங்கரஸ் வழி நின்று கடனாற்றப் பிரதம மந்திரி முற்படுவது அறிவுடைமையாகும். பிரதம மந்திரி எவ்வழி நின்று கடனாற்றினும் ஆற்றுக. காங்கரஸ் பிரதிநிதியாகச் சென்ற மகாத்மாகாந்தி, தள்ளாத வயதில், கடல் கடந்து, குளிர் மிகுந்தநாட்டில், அந்நாட்டுக் கோலம் பூணாது, நேரிய முறையில், அஞ்சா நெஞ்சத்துடன், நடுநிலைபிறழாது, அறவழியில் நின்று, காங்கரஸுக்கும் தேசத்துக்கும் மகாநாட்டில் சேவை புரிந்ததை என்னென்று பாராட்டுவது? அவருக்கு எம்மொழியால்நன்றி கூறுவது? காந்தியடிகள் வாழ்க; அவர் அறிவுறுத்தும் அஹிம்ஸா தர்மம் ஓங்க.

## அவசரச் சட்டம்

இராஜப் பிரதிநிதியாகவும் கவர்னர் ஜெனரலாகவும் வீற்றிருக்கும் லார்ட் வெல்லிங்டன், கடந்த திங்கட்கிழமை ஓர் அவசரச்சட்டத்தைப் பிறப்பித்தார். அது பதினோராவது அவசரச் சட்டமாம். அத்தகைய அவசரச் சட்டத்தை இந்தியா எப்பொழுதும் கண்டிராதென் றேகூறலாம். அதன் உள்ளுறை சுருக்கமாக மற்றோரிடத்தில் வெளியிடப்பட்டிருக்கிறது.

அவசரச் சட்டத்தின் நோக்கம் வங்காளத்தில் எழுந்துள்ள புரட்சி இயக்கத்தை அடக்குதல்வேண்டுமென் பதேயாகும். புரட்சி யியக்கத்தை அடக்கவேண்டுவது கடமையென்பதை மறுப்பாரில்லை. ஆனால் அக்கடமை நேரிய வழியில் நிகழ்தல் வேண்டுமன்றோ? லார்ட் வெல்லிங்டன் கொண்டமுறை நேரியதன்று என்பது நமது உட்கிடக்கை.

புரட்சியால் நலன்விளையாதென்பதை நாடு நன்றுதெரிந்து தெளிவடைந்திருக்கிறது. இந்நிலைக்கு நாட்டைக் கொணர்ந்த பெருமை காந்தியடிகளுக்குண்டு என்று கூறல் மிகையாகாது. காந்தியடிகள் உபதேசத்தால் தேசத்தில் அஹிம்ஸா தர்மம் தாண்டவம் புரிதல் கண்கூடு.

வங்காளத்தில் சில பைத்தியக்காரர்கள் புரட்சியில் உறுதிகொண்டிருக்கிறார்கள் என்றறிகிறது. அவர்கள்முயற்சியால் தேசத்துக்கு நலன்விளையுமென்று சொல்வதற்கில்லை. அவர்கள் செயலைக் காந்தியடிகளாதல் காங்கரஸாதல் தேசமாதல் ஆதரிக்கவில்லை. கொலை இயக்கம் இந்தியாவில் எப்பொழுதும் ஆதரவு பெறாதென்பது உறுதி.

எங்கணும் எதற்குஞ் சிற்சில பைத்தியக்காரர்களிருப்பார்கள். வங்காளத்திலுஞ் சிலர் இருக்கிறார். அம்மிகச் சிலர் பொருட்டுப் பயங்கரமான அவசரச்சட்டத்தைப் பிறப்பது அவசியமென்று தோன்றவில்லை. வங்காளத்திலுள்ள பெரும்பான்மையோர் புரட்சியை ஆதரிக்கின்றாரில்லை. பெரும்பான்மையோர் துணைகொண்டும் காந்தியடிகள் துணை கொண்டும் வங்காளத்தில் தோன்றியுள்ளகொலை இயக்கத்தை ஒடுக்கி விடக்கூடும். இவ்வழியில் லார்ட் வெல்லிங்டன் நண்ணாது அவசரச் சட்டத்தில் கை வைத்தது நியாயமாகத் தோன்றவில்லை.

வங்காள அவசரச் சட்டத்தின் சுருக்கத்தைப் படித்துப் பார்த்தால் நெஞ்சம் நடுங்குகிறது. வங்காளத்துக்குப் பெரிய சோதனைக்காலமென்றே சொல்லல்வேண்டும்.

மாஜிஸ்டிரேட்டுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்களை ஊன்றிப் படிக்குமாறு நேயர்களை வேண்டுகிறோம். இவ்வளவிற்கும் காரணமென்ன? கொலைப் புரட்சி சிறிது தலைகாட்டியதேயாகும். அஹிம்ஸா தர்மப்போர் எவ்வளவு நடந்தது! எத்தனைபேர் அதன்கண் தலைப்பட்டனர்? இத்தகை அவசரச் சட்டம் பிறந்ததோ? இல்லை. புரட்சி இயக்கம் சிறிது தலைகாட்டிற்றோ இல்லையோ அந்த அதிகாரவர்க்கத்துக்கு ஆக்கந் தேடிவிட்டது.

புரட்சி இயக்கம் அதிகார வர்க்கத்துக்கு ஆக்கந்தேடியிருக்கிறது. அது மற்றவர்கட்கு என்ன தேடியிருக்கிறது? அது நிரபராதிகட்கெல்லாம் கிலி நடுக்கம் முதலியவற்றை வழங்கியிருக்கிறது. வாலிபர்கள் நெஞ்சம் ஹிம்ஸையில் செல்வதால் நாட்டுக்குச் சிறிதாதல் நலனுண்டா என்பதை அவர்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக. அஹிம்ஸா தர்மப்போர் கண்ணுக்குக் கண்ணெதிரே வெற்றியளித்து வருவதைக் கண்ணாரக்கண்டும் புரட்சிக்காரர்கள் அவ்வழியை அவமதிப்பது அறிவுடைமையாகாது.

மிகமிகச் சிலர் செயலைப் பிரமாதப் படுத்தி பயங்கரமான அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்க லார்ட் வெல்லிங்டன் முற்பட்டது சிறந்த இராஜ தந்திரமாகாது. காந்தியடிகள்—காங்கரஸ் துணையை நாடி அவசரச் சட்டத்தை அழித்து விடுதலே சிறப்பு என்பதை லார்ட் வெல்லிங்டன் உணர்ந்து நடப்பாரென நம்புகிறோம்.

## வேண்டுவது பொறுப்பாட்சி

### பிரதிநிதிகளின் ஒரு முகமான கோரிக்கை

### சர்வகட்சி மகாநாட்டின் நடைமுறை

24-11-31ல் ஐக்கிய அரசியல் திட்டக் கமிட்டியின் கூட்டம் லார்ட் சாங்கேயின் தலைமையில் கூடியது. ஸ்ரீமான்கள் அரங்கசாமி ஐயங்கார், பேசுகையில் வியாபார விஷயத்தில் சமூக வேற்றுமை பாராட்டக்கூடாதென்றும், ஆனால் இந்தியாவிலேயே நிரந்தரமாக வசிப்பவர்களுக்கும், அவ்வப்பொழுது வந்து போகிறவர்களுக்கும் வேற்றுமை காட்டாமலிருக்க முடியாதென்றும், வெளிநாடுகளில் இந்தியர்கள் சரியாக நடத்தப்படாத பட்சத்தில், அந்நாட்டவர்கள் விஷயத்தில் பதிலுக்குப் பதில் செய்ய இந்தியாவுக்கு உரிமை வேண்டுமென்றும் கூறினர்.

ஸ்ரீமான் வி. எஸ். சீநிவாச சாஸ்திரி பேசுகையில், இந்தியர்களின் நல்லெண்ணத்தில் பிரிட்டிஷார் நம்பிக்கை கொள்ளுதல் நல்லதென்று குறிப்பிட்டார். பண்டிதமாளவியா, காந்தியடிகளின் கருத்தைத் தழுவிப் பேசினர். இதனுடன் வியாபார உரிமை சம்பந்தமான வாதம் முடிவுற்றது.

பின்னர்பணசம்பந்தமான வாதம் தொடக்கப்பட்டது. இதில் ஸர் புருஷோத்தமதாஸ் தாகூர்தாஸ், ஸர் தேஜ் பகதூர் சாப்ரு, ஸ்ரீமான் பெதிக் லாரென்ஸ், லார்ட் ரெடிங் முதலியோர் கலந்துகொண்டனர்.

### இந்தியா அரசாங்கத்தில் பொறுப்பாட்சி

25-11-31ல் அரசியல் திட்டக் கமிட்டிக் கூட்டம் கூடியது. முதலில் ஸ்ரீமான் வெட்ஜ்வுட் பென் எழுந்து, மாகாணப் பொறுப்பாட்சியுடன் கூடவே மத்தியப் பொறுப்பாட்சியும் கொடுக்கப்படுமாவென்பதே இப்பொழுது முக்கியப் பிரச்னையாயிருக்கிறதென்றும், இரண்டையும் ஒன்றாக அமுலுக்குக் கொண்டு வருவதே நல்லதென்றும் கூறினர்.

பின்னர் ஸ்ரீமான் லீஸ் ஸ்மித் என்பார் பின் வருமாறு பேசினர்:—

"இந்தக் கமிட்டியில் வாதம் செய்யப்பட்ட விஷயங்களில் அதிகமான அபிப்பிராய வேற்றுமை இல்லை. மத்திய அரசாங்கத்தில் பொறுப்பாட்சி ஏற்படுத்துவதற்குச் சிறிதுகால தாமதமேற்படும் என்பது சரியே. ஆனால் மாகாணப் பொறுப்பாட்சியையும், மத்தியப் பொறுப்பாட்சியையும் ஒரே சமயத்தில் அமுலுக்குக் கொண்டு வருவதானால் அதற்காகச் சிறிதுகாலம் தாமதிக்கவும் இந்தியர்கள் தயாராயிருப்பார்கள்"

பின்னர் ஸர் தேஜ்பகதூர் சாப்ரு பேசுகையில் மத்தியப் பொறுப்பாட்சியில்லாமல் மாகாணப் பொறுப்பாட்சியைத் தாம் எதிர்த்து நிற்பதாகவும், இந்தியா அரசாங்கமும், இந்தியா மந்திரியும் கட்டுப்படுத்தாத மாகாணப் பொறுப்பாட்சி கொடுக்கப்படும் என்று சொல்வதைத் தாம் நம்பவில்லை யென்றும், மாகாணப் பொறுப்பாட்சியுடன் மட்டும் திருப்தியடைகிறவர்கள் இந்தியாவில் ஒருவரும் இல்லையென்றும் கூறினர். ஸ்ரீமான் வி. எஸ்! சீநிவாச சாஸ்திரி இதை ஆதரித்துப் பேசினர்.

ஸ்ரீமான் ஏ. இராமசாமி முதலியார் பேசுகையில் ஜஸ்டிஸ்கட்சியார், மத்தியப் பொறுப்பாட்சியில்லாமல் மாகாணப் பொறுப்பாட்சியை ஏற்கச் சித்தமாயில்லை யென்றும், மத்தியப் பொறுப்பாட்சி கொடாவிட்டால் கிளர்ச்சி ஏற்படுமென்றும் கூறினர். பின்னர் ஸ்ரீமான்கள் ஜோஷி, ஜயகர் முதலியோர் இதே தோரணையில் பேசினர்கள்.

### மகாத்மாகாந்தியின் பேச்சு

பின்னர் காந்தியடிகள் உருக்கத்துடன் பேசியதாவது:—

மத்திய அரசாங்கத்தில் பொறுப்பாட்சி ஏற்படுத்தாவிடினும், காங்கிரஸ் அங்கீகரிக்கக் கூடியதான மாகாண சுய ஆட்சித் திட்டத்தை யளிக்க அரசாங்கத்தார் உத்தேசிக்கவில்லை யென்று எனக்குத் தெரிகிறது. உதாரணமாக வங்காளத்தை எடுத்துக்கொள்வோம். என்னுடைய மாகாண சுய ஆட்சித் திட்டப்படி நாங்கள் பலாத்காரச் செயல்கள் இல்லாமற் செய்யக்கூடும். பலாத்காரச் செய்கைகளில் இறங்குபவர்களை நாங்கள் வேட்டையாட முற்படமாட்டோம். ஆனால் அவர்களிடையே மனமாறுதலை யுண்டுபண்ணி அவர்களை எங்கள் பக்கம் சேர்த்துக்கொள்ளுவோம். என்னுடைய மாகாணச் சுய ஆட்சித் திட்டப்படி ஒரு சிப்பாய்கூட வங்காளத்திற்குள் வரவோ அல்லது நாங்கள் அடக்கி ஆளக்கூடாத இராணுவத்தை அங்கு வைத்திருப்பதற்காக ஏராளமாகப் பணஞ் செலவழிக்கவோ இடம் கொடுக்கமாட்டோம். பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருக்கும் எல்லாக்



கைதிகளையும் நான் விடுதலை செய்துவிடுவேன். 1818-ம் வருஷத்திய அவசரச் சட்டத்தை சட்டப் புஸ்தகத்திலிருந்து நான் எடுத்துவிடுவேன். அவ்வித மாகாண சுய ஆட்சி ஏற்படுமென்று நான் நம்பியிருந்தேன். நான் டெல்லி சமரஸ ஒப்பந்தத்தை ஆதாரமாகக் கொண்டு இங்கு வந்தேன். ஐக்கிய அரசியல் திட்டத்தைப்பற்றி விவாதித்து, இந்தியாவின் நன்மைக்கொத்த ஓர் ஏற்பாட்டைப் பெறுவதற்காக நான் லண்டன் வருவதென அந்த ஒப்பந்தம் தெளிவாகக் கூறியிருக்கிறது. பார்லிமெண்டும் மந்திரிகளும் மனது வைத்தால் அரசியல் திட்டத்தைத் தயாரிக்க மூன்று வருஷங்கள் பிடிக்குமென நான் நம்பவில்லை. மகாநாட்டினால் எவ்வித பலனு மேற்படப் போவதில்லையென நான் அஞ்சுகிறேன். இந்தியாவில் கொடுமையான அடக்கு முறையே ஏற்படப் போகிறது. அடக்கு முறையைக் கண்டு நான் அஞ்சவில்லை. அஃது எங்களுக்கு நன்மையே செய்திருக்கிறது. ஆனால் பிரிட்டிஷாருடன் ஒத்துழைப்பதற்காக நான் மீண்டும் தயாரித்த மெல்லிய கயிறும் இப்பொழுது அறுபட்டு விடுமோ வென அஞ்சுகிறேன்.

நான் மீண்டும் ஒத்துழையாதானுகவுஞ் சத்தியாக்கிரகியாகவுமாக வேண்டுவதுதான். இந்தியாவிலுள்ள கோடிக் கணக்கான ஜனங்களுக்கு மீண்டும் ஒத்துழையாமைச் செய்தியையும் சட்டமறுப்பையும் உபதேசிக்க வேண்டுவதுதான். எவ்வளவு விமானங்கள் இந்தியா மீது பறந்தாலும் அக்கரையில்லை; எவ்வளவு பீரங்கிகள் இந்தியாவுக்குக் கொண்டுவரப் பட்டாலும் அக்கரையில்லை.

### காங்கிரசும் பலாத்காரமும்

பலாத்காரச் செயல்களுக்குக் காங்கிரஸ் பொறுப்பாளி யென்பதை இச்சமயத்தில் நான் மறுக்க விரும்புகிறேன். அதுமாத்திரமல்ல, காங்கிரஸின் அஹிம்சா தருமக்கொள்கை தான் இதுவரை பலாத்காரச்செயல்களை வெகு தூரம் அடக்கி வந்திருக்கிறது. சுதந்திரம் பெற்றாக வேண்டுமென்பதுதான் எனது உறுதி. ஆனால் பலாத்காரச் செயல்கள் எவ்வித நன்மையு முண்டுபண்ண முடியாதென்பதே என்று உறுதியான கருத்து.

அரசாங்கத்தார் நினைக்கும் மாகாண சுய ஆட்சி நான் கோரும் மாகாண சுய ஆட்சியாகாது. இதுவரை நடந்துள்ள விவாதங்களிலிருந்து இது நன்கு தெரிகிறது. ஆகவே என்னைத் தனித்துவிட்டு விடுங்களென எனது நண்பர்களிடம் நான் கூறிவிட்டேன். மாகாண சுய ஆட்சிக்காக ஒத்துழைத்தோ, ஏதாகிலும் தேசத்திற்குக் கிடைக்கவேண்டுமென்று நினைத்தோ நாட்டு நலத்தை நான் விற்றுவிடப் போவதில்லையெனக் கூறிவிட்டேன். ஓர் எல்லைக்குட்படுத்தப்படும் மத்தியப் பொறுப்பாட்சியும் எனக்குத் திருப்தியளிக்கப் போவதில்லை. இராணுவம், செல்வ விஷயம் ஆகியவற்றிலும் பொறுப்பளிக்கக் கூடிய மத்தியப் பொறுப்பாட்சியையேநான் வேண்டுகிறேன். அஃது இங்கு இப்பொழுது எனக்குக் கிடைக்கப்போகிறதில்லை யென்பதும் எனக்குத் தெரியும்; அதற்குத் தயாரான பிரிட்டிஷார் இங்கில்லை யென்பதும் எனக்குத் தெரியும். ஆகவே நான் நாடு திரும்ப வேண்டுவதுதான்; கஷ்டத்தை யேற்குமாறு என் நாட்டாரைக் கேட்கவேண்டுவதுதான். அந்நியர் வலுவாக மத்திய அரசாங்கத்தில் ஆட்சி புரிவதென்பதும் மாகாணங்களில் வலுவான சுய ஆட்சி யிருப்பதென்பதும் முரண்பட்டவை யாகும். ஆகவே இவ்விரண்டும் ஒன்றுபட்டே யிருக்கவேண்டுமென்பது எனது அபிப்பிராயமாகும். ஆனால் நான் நினைத்துள்ள வண்ணம் மாகாண சுயஆட்சி ஏற்படுமென யாராகிலும் கூறினால் அதை ஏற்கத் தயாராக விருக்கிறேன்.

### இந்தியா மந்திரியின் பதில்

பின்னர் ஸர் சாமியல்ஹோர் பின்வருமாறு பேசினர்:—

"இங்கே எழுப்பப்பட்ட விபரீத சந்தேகங்களுக்கு எவ்வித ஆதாரமுமில்லை. அரசியல் திட்டம் தயாரிப்பதை அரசாங்கத்தார் கைவிட்டுவிட்டனர் என்பது உண்மையாகாது. முன்னேற்றமடைய வேண்டுமென்பதே அரசாங்கத்தின் நோக்கம். அரசாங்கத்தார் ஏதோ ஒரு முடிவுக்கு வந்துவிட்டனர் என்று கூறுவதும் சரியாகாது. அரசாங்கத்தார் இந்தியப் பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தைக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். அரசாங்கத்தார், தங்கள் உறுதிமொழிகளை எவ்வளவு சீக்கிரத்தில் அமுலுக்குக் கொண்டுவர முடியும் என்பதைப்பற்றித் தீவிரமாக ஆலோசித்துக்கொண்டிருக்கின்றனர். இங்கே கூறியவர்களின் கருத்துக்களைப் பிரதமமந்திரிக்கு நான் அறிவிக்கிறேன். வங்காள நிலைமையைப்பற்றி மகாத்மாகாந்தி கூறியது சரியாகாது. அவரை, இந்தியா ஆபீசுக்கு வருமாறு அழைக்கிறேன். அங்கே வந்தால், அவருக்கு நான் உண்மையான விவரங்களை அறிவிக்கிறேன்."

பின்னர் பணசம்பந்தமான வாதம் நடைபெற்றது.

### முஸ்லீம்களின் ஆதாவு

26-11-31ல் ஐக்கிய அரசியல் திட்டக் கமிட்டி கூடியது. முதலில் ஜனுப்ஜின்னு பேசுகையில், இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்திற்கு முஸ்லீம்கள் தடையாக இருக்கமாட்டார்களென்றும், ஆனால் அரசியல் முன்னேற்றமும் வகுப்புச் சமரஸமும் ஒன்றுபட்டதென்றும், முஸ்லீம்களுக்குப் பாதுகாப்பு அளித்து, அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெற்றாலன்றி எந்த அரசியல் திட்டமும் இருபத்து நான்கு மணி நேரங்கூட வேலை செய்யாதென்றும், வெறும் மாகாணப்பொறுப்பாட்சி கொடுத்துவிட்டதால் மட்டும் இந்தியர்கள் திருப்தியடையமாட்டார்களென்று முஸ்லீம்கள் கருதுகிறார்களென்றும் கூறினர். இதே கருத்தைத் தழுவி ஸர் முகம்மது ஷாபியும் பேசினர்.

பின்னர் ஸ்ரீமான் காவின் ஜோன்ஸ், சர்தார் உஜ்ஜல்சிங், ஸ்ரீமான் அரங்கசாமி ஐயங்கார், பண்டிதமாளவியா முதலியோர் பேசினர். கடைசியில், ஸ்ரீமான் வெட்ஜ்வுட் பென் பேசுகையில், அரசாங்கத்தார் இந்த வாதத்தில் கலந்து தங்கள் கருத்தை வெளியிடாதது வருந்தத்தக்கது என்றும் எல்லாப் பிரதிநிதிகளும் ஒற்றுமைப்பட்ட அபிப்பிராயத்தை வெளியிடுவதை அரசாங்கத்தார் கவனிக்க வேண்டுமென்றும், லார்ட் இர்வின், மகாநாடு சம்பந்தமாக அதிகம் உழைத்திருக்கிறாரென்றும் கூறினர். பின்னர் ஸர் சாமியல் ஹோர் பேசினர்.

### லார்ட் சாங்கேயின் உறுதிமொழி

27-11-31ல் ஐக்கிய அரசியல் திட்டக் கமிட்டியில், பண சம்பந்தமான அறிக்கை சில திருத்தங்களுடன் அங்கீகரிக்கப்பட்டது. இதனுடன் கமிட்டி கலைந்தது. கலைவதற்கு முன்னர், பிரதிநிதிகள், லார்ட் சாங்கேயைப் பாராட்டிப் பேசினர்கள். இவைகளுக்குப் பதில் அளிக்கும்போது அவர் பின் வருமாறு குறிப்பிட்டார்:—

என்னுடைய வேலை மிகக் கஷ்டமானதே; ஆனால் இன்பமாயிருந்தது. ஒன்று நிச்சயமாகக் கூற விரும்புகிறேன். நான் ஐக்கிய ஆட்சி இந்தியாவையே விரும்புகிறேன். உங்களை நான் கைவிட்டு விடப்போவதில்லை; வேறெவரும் கைவிடாதிருக்குமாறும் நான் பார்த்துக் கொள்கிறேன். எவரும் கைவிட்டு விடுவாரென்றும் நீங்களுங் கருத வேண்டாம். ஐக்கிய ஆட்சி இந்தியா என்பது சீக்கிரத்தில் நடைபெறக் கூடியது. இதை எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரத்தில் அமுலுக்குக்கொண்டுவருகிறோமோ அவ்வளவுக்கவ்வளவு எல்லாருக்கும் நல்லது. கடைசி முறையாகப் போய்வாருங்கள் என்று நான் சொல்லப்போவதில்லை. எப்பொழுதாவது, எங்கேனும்சீக்கிரத்தில் உங்களைச்சந்திப்பேன் என்றே நினைக்கிறேன். அப்பொழுது இந்தியா விரும்பியதைப் பெற்றதற்காக உங்களை நான் பாராட்டுவேன்.

இதனுடன் ஐக்கிய அரசியல் திட்டக் கமிட்டி கூட்டம் முடிவடைந்தது.

## மகாநாட்டின் பொதுக் கூட்டம்

28-11-31ல் சர்வகட்சி மகாநாட்டின் முழுக் கூட்டம் ஸ்ரீமான் ராம்ஸே மாக்டோனல்ட் தலைமையில் கூடியது. லார்ட் சாங்கே, ஐக்கிய அரசியல் திட்டக்கமிட்டியின் அறிக்கைகளையும் ஸ்ரீமான் மாக்டோனல்ட் சிறுபான்மைக்கமிட்டி அறிக்கைகளையும் அளித்தினர்கள். பின்னர் பொதுவிவாதம் தொடங்கப்பட்டது.

ஸர் ஏ. பி. பாத்ரோ பேசுகையில், மகாநாடு நல்ல வேலைசெய்தபோதிலும் முடிவு திருப்திகரமானதாயில்லையென்று குறிப்பிட்டார், ஸர்கௌவாஸ்ஜி ஜிஹாங்கீர், வெறும் மாகாணப் பொறுப்பாட்சியினால் இந்தியா திருப்தியடைந்துவிடாதென்றும், அப்படி அதையே அமுலுக்குக் கொண்டுவருதானால் தம்மைப் போன்றவர்கள் பொது ஜன சேவையில் இருக்கமுடியாதென்றும் கூறினர்.

இதே தோரணையில் வேறு பலரும் பேசினர். 29-11-31 நடைபெற்ற மகாநாட்டுக் கூட்டத்திலும் பிரதிநிதிகள், மத்தியப் பொறுப்பாட்சியின் அவசியத்தைப் பற்றிப் பேசினர்கள்.

### ஸ்ரீமான் பென்னின் வேண்டுகோள்

30-11-31ல் சர்வகட்சி மகாநாடு மீண்டும் கூடியது. முதலில் ஸ்ரீமான் ஜயகர் பேசுகையில், ஐக்கிய ஆட்சித்திட்டம், மத்திய அரசாங்கத்தில் பொறுப்பு, பாதுகாப்புகள் ஆகிய இவைகளைப்பற்றி ஒற்றுமையான அபிப்பிராயம் இருந்து வருகிறதென்றும், அரசாங்கத்தின் நோக்கம் வெளியிடப்படுவதை இந்தியா, ஆவலுடன் எதிர்பார்க்கிறதென்றும் கூறினர். பின்னர் லார்ட் ரெடிங், ஸ்ரீமதி சரோஜனி தேவி, ஸர் தேஜ்பகதூர் சாப்ரு முதலியோர் பேசினர். ஸ்ரீமான் வெட்ஜ்வுட்பென் பேசுகையில், இந்த இரண்டாவது மகாநாடு வெற்றியுடன் முடிய வேண்டுமென்று தாம் விரும்புவதாகவும், அரசாங்கத்தாரின் நோக்கம் தெரியவில்லையாதலினால், நிர்ணயமான ஒரு முடிவுக்கு வர முடியவில்லையென்றும் பிற்போக்காளர்களின் பேச்சுக்குப் பிரதம மந்திரி இணங்கக் கூடாதென்றும், இந்தியா மந்திரியின் பாதுகாப்பாளர்போல் இந்த மகாநாடு இருக்க வேண்டுமென்றும், இங்கு வந்துள்ள பிரதிநிதிகளும் ஒத்துழைப்பதாக வாக்குறுதியளிக்கவேண்டுமென்றும், எந்த விதமான அரசாங்கம் இந்தியாவில் ஆதிக்கம் வகித்தபோதிலும் அது பலமுள்ளதாக இருக்க வேண்டுமென்றும், ஆனால் பலமுள்ள அரசாங்கத்திற்குத் துருப்புகள் அணிவகுத்துச் செல்லல், அவசரச் சட்டங்கள், அதிக வட்டிகள் கொடுத்து குறைந்த தவணையில் கடன் வாங்குதல், பீரங்கிகள் முதலியவைகளே ஆதாரங்களாகாவென்றும், ஜன விருப்பத்திற்குத் தக்கபடி நடைபெறும் ஆட்சி முறையே பலமுள்ளதாக இருக்கும் என்றும், நற்பிரஜைகளின் ஒத்துழைப்பையும், தேசாபிமானிகளின் ஆதரவையும் நாம் எப்படிப் பெற முடியும் என்றும் இங்கே ஒத்துழைப்பு இருக்கிறது என்றும் அதை உடனே நாம் கிரகித்துக்கொள்ள வேண்டுமென்றும் கூறினர்.

### காந்தியடிகள் சொற்பொழிவு

பின்னர் வேறு பலர் பேசியதும் மகாத்மா காந்தி பேசத் தொடங்கினர். இவர் பேசியபோது இரவு பன்னிரண்டுமணி அடித்துவிட்டது. இவர் பேச்சைக்கேட்பதற்கென்று பிரதம மந்திரி, மகாநாட்டைத்தள்ளிவைத்து மந்திரி சபைக்குச் சென்று அங்கே சில அலுவல்களைக் கவனித்துக்கொண்டு பின்னர் வந்து, மகாநாட்டில் கலந்துகொண்டார். இவர் வந்தபிறகுதான் காந்தியடிகள் பேசத் தொடங்கினர். சரியாக இவர் எழுபது நிமிஷ நேரம்வரை பேசினர். இந்தச் சொற்பொழிவு, அவர் வாழ்நாளிலே செய்த எல்லாப் பிரசங்கங்களைக் காட்டிலும் மிகச் சிறந்ததாயிருந்ததென்றும், இஃது எல்லாருடைய மனதையும் கவர்ந்ததென்றும் கூறப்படுகிறது. அடிகள் நிகழ்த்திய சொற்பொழிவின் சாரம் வருமாறு:—

மகாநாட்டில் கூறப்பட்ட பாதுகாப்பு முறைகள் இந்தியாவின் நன்மைக் குகந்தனவாயில்லை. அவை அதிருப்திகரமாயிருக்கிறன. உண்மையான சுதந்திரம் கிடைக்கும்பட்சத்தில், நான் எந்தவித சமாஸத்திற்கும் வரத் தயார். அகில இந்திய ஸ்தாபனமாகக் காங்கிரஸ் ஒன்றுதான் இருக்கிறது. அஃது எல்லாச் சிறுபான்மைச் சமூகங்களின் பிரதிநிதியாகவும் விளங்குகிறது. நான் ஒரு போட்டி அரசாங்கத்தை நடத்துவதாகக் கூறுகிறார்கள். பலாத்கார வாதிகளுக்கோ பலாத்காரத்தை ஆதரிப்பவர்களுக்கோ நான் பரிந்து பேசவில்லை. இலட்சக் கணக்கான ஸ்திரீபுருஷர்களைச் சட்ட மறுப்பாகிற தீக்குளிப்புக்கு உட்படுத்தாமல் ஒருவித சமரஸத்திற்குவர எல்லா முயற்சிகளையும் நான் செய்துபார்ப்பேன். ஆனால் அதைத்தொடங்க வேண்டுவது அவசியமானால் அதைச் சந்தோஷத்துடனேயே நான் தொடங்கி நடத்துவேன். எனக்கு வேண்டுவது உண்மையான சுதந்திரம். இங்கிலாந்துக்கும் இந்தியாவுக்கும் இருக்கும் தொடர்பு அறுந்துபோகக் கூடாதென்பது என் கோரிக்கை. ஆனால் இந்தத் தொடர்பானது, சுதந்திரத்தை அடிப்படையாகக் கொண்ட நட்பை ஆதாரமாகக் கொண்டிருக்க வேண்டும். பாதுகாப்புகள் வேண்டுமென்று காங்கிரசும் கோருகிறது. ஆனால் அவை இந்தியாவின் நன்மைக் குகந்தனவாகவும், இங்கிலாந்தின் நன்மைக்கு மாறுபாடில்லாதனவாகவும் இருக்கவேண்டும். இந்தியாவினுடையவும் இங்கிலாந்தினுடையவும் நியாயமற்ற உரிமைகள் மறையவேண்டும். ஸ்ரீமான் ஜயகர், ஸர் சாப்ரு ஆகியோர் கூறியதுபோல், பிரதிநிதிகளுக்குள் ஒருவித ஒற்றுமை இருக்கிறதென்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் உண்மை விஷயத்தை நாம் தொடவில்லை. பிரமிப்பை அளிக்கக்கூடிய பல பிரச்னைகள் நம் முன்னர் இருக்கின்றன. ஆனால் அவைகளை நம்மால் தீர்த்துவைக்க முடியுமென்றேகருதுகிறேன். சட்டமறுப்பை மீண்டும் ஆரம்பிக்கவேண்டுமென்பது என விருப்பமல்ல. இப்பொழுது ஏற்பட்டுள்ள சமரஸ ஒப்பந்தத்தை நிரந்தரமானதாகச் செய்யவேண்டு மென்பதே என் விருப்பம். என்னை நீங்கள் நம்பினால், காங்கிரஸை நம்புவதேயாகும். காங்கிரஸ் என்னைவிட முக்கியமானதாகும். சிறுபான்மையோருடைய பிரச்னைகள் தீர்ந்தாலொழிய இந்தியாவுக்குச் சுயராஜ்யம் கிடையாது. ஆனால் ஒரு பரிகாரம் ஏற்படுமென்ற நம்பிக்கை எனக்குண்டு. அந்நிய ஆட்சி இருக்கும் வரை, பரிகாரம் ஏற்படாதென்பது நிச்சயம். இந்த வகுப்புப் பிரச்னை, பிரிட்டிஷ் ஆட்சிக்கு முன்னால் இருந்ததில்லை. இப்பொழுதுகூட கிராமாந்தரங்களில் ஹிந்துக்களும் முஸ்லீம்களும் சமரஸமாகவே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். சுதேச மன்னர்கள் தங்கள் பிரஜைகளுக்கு ஜீவாதாரமான உரிமைகளை அளிப்பார்களென்று கருதுகிறேன். ஜனப் பொறுப்பாட்சியைத்தங்கள்சமஸ்தானங்களில் அமுலுக்குக் கொண்டுவருவார்களென்று நம்புகிறேன். இங்கிலாந்தில் ஜார்ஜ் மன்னர் எப்படி அரசாள்கிறாரோ அப்படியே சுதேச மன்னர்களும் தத்தம் சமஸ்தானங்களில் ஆட்சிபுரிய இடம் அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். காங்கிரஸின் இஷ்டப்படி காரியங்கள் நடக்குமாயின், எல்லைப் புறமாகாணத்திற்கு நான் உடனே மாகாணப் பொறுப்பாட்சியளிப்பேன். நீங்கள் சம்மதிக்கும் பட்சத்தில் என்னுடைய ஒத்துழைப்பனைத்தையும் அளிக்க நான் சித்தமாயிருக்கிறேன். என்னிடத்தில் காட்டிய பொறுமைக்காக எல்லாப் பிரதிநிதிகளுக்கும் நான் வந்தன மளிக்கிறேன். இங்கிலாந்தில் பல்லாயிரக் கணக்கானவர்களுடைய நட்பை நான் பெற்றிருக்கிறேன்.

### ஸ்ரீமான் சாஸ்திரி

இறுதியாக ஸ்ரீமான் சீநிவாச சாஸ்திரியார் பேசுகையில் பின் வருமாறு குறிப்பிட்டார்:—

மகாத்மாஜி, இனி உங்களுடைய வேலை எங்களிடமேயே இருக்கிறது. ஒப்புவமையில்லாத புகழை நீங்கள் சம்பாதித்திருக்கிறீர்கள். அபரிமிதமான செல்வாக்கு உங்களுக்கு இருக்கிறது. உங்களுடைய ஆன்ம சக்தியும் மனித சமூகத்தை உயர்த்தும் ஆற்றலும் உலகத்தாரால்போற்றப்பட்டு வருகின்றனநீங்கள் சொல்கிறபடி நடக்கக்கூடிய ஜனங்களை நீங்கள் மீண்டும் துன்பம் என்னும் கணவாயின் வழியாக அழைத்துக் கொண்டு செல்லப் போகிறீர்களா? இஃது அநாவசியம் என்று நான கருதுகிறேன். இந்தியாவின் எதிர்கால முன்னேற்றம், உங்கள் கையிலேயே இருக்கிறது. என்னைப்போன்றவர்கள் உங்களுக்குச் சிறிது பயன்படக்கூடும். எங்களையுங்கூட அழைத்துச்செல்லுங்கள். உங்களுடனும், உங்களுடைய நண்பர்களுடனும் நாங்கள் சேர்ந்துகொண்டு நாங்கள் எதிர்கால அரசியல் திட்டத்தைப் பண்படுத்த முடியும். உங்களுடைய முறைகளை மாற்றிக்கொண்டு, நீங்கள் இங்கே வந்திருக்கிறீர்கள் என்பதற்காக இந்தியா உங்களுக்கு நன்றி பாராட்டக்கூடும். நான் சிறிது சரித்திரம் படித்திருக்கிறேன். பிரிட்டிஷார், அடிக்கடி தவறுனதும், அறிவற்றதுமான காரியங்களைச் செய்கிறார்கள் என்பதை நான் அறிவேன். ஆனால் நாளா வட்டத்தில், நியாயமானதும், நிதானமானதுமான வழிகளில் திரும்பி விடுகின்றனர். இப்பொழுது அவர்கள் எவரும் பாராட்டத்தக்க ஒரு மாற்றத்திற்கு வந்திருக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். இப்பொழுது அவர்களை நம்மோடு சேர்த்துக்கொண்டால் வெற்றி நம்முடையதே."

பின்னர் ஸ்ரீமான் சாஸ்திரியாரின் பேச்சைப் பெரிதும் பாராட்டி ஸ்ரீமான் ராம்ஸே மாக்டோனல்ட் சில வார்த்தைகள் கூறினர்.

மன்னர் பிரானுக்குத் தங்கள் நன்றியைத் தெரிவிப்பதாக ஒரு செய்தி அனுப்ப வேண்டுமென்று பிரதம மந்திரி கூறியதன் பேரில் பெரிய ஆரவாரத்திற் கிடையே அந்த யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

## சர்தார் படேலின் எச்சரிக்கை

ஆமதாபாத்தில் 29-11-31 காலை மாதந்தோறும் நடைபெறும் தேசீயக் கொடியேற்ற விழா நடை பெற்றது. அதுகாலை, சர்தார் வல்லபாய் படேல் கூறியதாவது:—

இப்பொழுது நம்மெல்லோர் மனதிலும் ஒரே ஓர் எண்ணந்தான் முன்னிற்கிறது. அதாவது சமீபத்தில் வரப்போகும் போருக்கு நாமெல்லாரும் நம்மைத் தயார்ப் படுத்திக் கொள்வதைப்பற்றி யேயாகும். வெளியாரிடமிருந்து ஏதேனும்பெறுவோம் என்றமயக்கம் இப்பொழுது உங்கள் எல்லாரிடமிருந்தும் நீங்கியிருக்கும். அப்படியானால் "காந்தியடிகள் ஏன் இங்கிலாந்துக்குச் சென்றார்?" என்று நீங்கள் கேட்கலாம். ஆனால் அவர் இங்கிலாந்து சென்றதனால் நஷ்ட மெதுவும் இல்லையென்பதை நீங்கள் அறிய வேண்டும். காந்தியடிகள், இங்கிலாந்திலிருக்கும் போது, வருங்காலப் போராட்டத்திற்கு வேண்டிய எல்லா ஆயுதங்களையும் செய்திருக்கிறார். பிரிட்டிஷ் பொது ஜனங்கள் முன்னிலையில் அவர் காங்கிரஸ் கட்சியை எடுத்துரைத்ததைப் பற்றி உலகமே வியந்து பாராட்டிக் கொண்டிருக்கிறது. அவர் இந்தியாவுக்குத் திரும்பி வந்தவுடன் சென்ற போராட்டத்தில் செய்த தியாகங்களைவிட ஆயிரம் மடங்கு அதிகமான தியாகங்களைச் செய்ய நாம் சித்தமாயிருக்க வேண்டும். அரசாங்கத்தாரும், வருகிற போராட்டத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது. இஃது உண்மையானால் நாம் பெரிதும் சந்தோஷிக்க வேண்டியதே. ஏனெனில் அப்பொழுதுதான் போராட்டத்தின் முடிவும் சீக்கிரத்தில் தெரிந்து விடும். ஆதலின் நாம் அதிக தியாகங்களைச் செய்யக் கூடிய பலத்தை நமக்கு அருளும்படி ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக.

## பணக்காரர்களாவதெப்படி?

### ஏழைகளின் நிலைமை யென்ன?

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் ஸ்ரீமான் மகாதேவ தேசாய் எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு:—

ஸ்ரீமதி சரோஜினிதேவி ஒருநாள் காந்தியடிகளுக்கு, ஒரு சில இந்திய இளைஞர்களை அறிமுகஞ்செய்துவைத்தார். இவர்கள்பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்தவர்கள். இவர்களுக்குத் தலைவராக, ஸ்ரீமதி சரோஜினியாரின் கடைசிக்குமாரரான பாபா என்பவரே இருந்தார். இவர்கள் அனைவரும் தங்கள் தாய் நாட்டினின்றும் பிரிந்து வந்தவர்கள். இவர்கள் காந்தியடிகளைச் சந்தித்தபோது பின் வரும் சம்பாஷணை நடைபெற்றது:—

வினு:—இந்தியாவிலுள்ள சுதேசமன்னர்கள், லேச்சவான்தார்கள், மில் முதலாளிகள், ரொக்க லேவாதேவிக்காரர்கள் முதலியோர் எப்படி பணக்காரர்களாகிறார்கள் என்பதை நீங்கள் கூறமுடியுமா?

காந்தியடிகள் விடை:—பாமர ஜனங்களின் பொருள்களைச் சுரண்டுவதன் மூலமாக.

வினு.—இந்தியத் தொழிலாளிகளையும் விவசாயிகளையும் சுரண்டாமல் இவர்கள் பணக்காரர்களாக முடியுமா?

விடை:—ஒரு வழியில் முடியும்.

வினு:—இவர்களுக்கு வேண்டிய பணத்தைச் சேகரித்துக் கொடுக்கும் பணத்திற்குக் காரணர்களாயுள்ள தொழிலாளிகள் வாழ்வைவிட இவர்கள் - இந்தப் பணக்காரர்கள் - சிறப்பாக வாழ்வது நியாயமாகுமா?

விடை:—எவ்வித நியாயமுமில்லை. நாம் எல்லோரும் சமமான சந்தர்ப்பங்களை உடையவர்களாகப் பிறந்திருக்கிறோமாயினும், எல்லாருக்கும் ஒரேவிதமான திறமை இருப்பதில்லை. இயற்கையில் அது முடியாத தேயாகும். உதாரணமாக, எல்லாரும் ஒரேவிதமான உயரம், நிறம், புத்தியின் அளவு முதலியவைகள் இருப்பதில்லை. இதனால் சிலர் அதிகமாகச் சம்பாதிக்கின்றனர்; சிலர் குறைவாகச் சம்பாதிக்கின்றனர். அதிகமான புத்தியுடையவர்கள் அதிகமாகச் சம்பாதிக்கிறார்கள். அஃதில்லாதவர்கள் குறைவாகச்சம்பாதிக்கிறார்கள். தங்கள் திறமையை அன்பாக உபயோகிக்கிறவர்கள், தேச காரியத்தைச் செய்தவர்களாகிறார்கள். இவர்கள் டிரஸ்டிகளைப்போலிருக்கிறார்கள். திறமையுடையவர்கள் அதிகமாகச் சம்பாதிக்கிறார்கள். அதிகமாக சம்பாதிக்கிறார்களென்ற காரணத்திற்காக, அவருடைய அறிவுத் திறமை நசித்துப் போகும்படி செய்யக்கூடாது. ஆனால் இங்ஙனம் சம்பாதிப்போருடைய சம்பாத்தியத்தின் பெரும்பாகம், தேச நன்மைக்காகவே செலவழிக்கப்படவேண்டும். எப்படி ஒரு குடும்பத்தில், சம்பாதிக்கிற பிள்ளைகளின் சம்பாத்தியம் அக்குடும்பத்தின் பொது நலனுக்குச் செலவழிகிறதோ அப்படியேதான் இதுவும். இதுவே என்னுடைய இலட்சியம். ஜீவாதார உரிமைகள் என்பதில் இஃது அடங்கியிருக்கிறது.

#### அஹிம்சை புரட்சி

வினு:—தங்களுடைய பொருளாதார, சமூக அபிவிருத்திக்காக விவசாயிகளும் தொழிலாளர்களும் போர் புரிவது நியாயமென்று உங்களுக்குத் தோன்றவில்லையா?

விடை:—இல்லை; அவர்கள் சார்பாக நான் போராடிக் கொண்டிருகிறேன். ஆனால் அஃது அஹிம்சைப் புரட்சியேயாகும்.

வினு:—ஐக்கிய மாகாணத்தில், குடிகள் செலுத்தும் கிஸ்தியை வஜாசெய்யவேண்டுமென்று நீங்கள் கிளர்ச்சி செய்வதனால், விவசாயிகளின் நிலைமை உயரலாமே தவிர இந்த முறையின் வேரை அடியோடு களைகிறவர்களாக மாட்டீர்களோ?

விடை:—ஆம்; எல்லாவற்றையும் ஒரே காலத்தில் செய்துமுடிக்க முடியாதல்லவா?

வினு:—அப்படியானால் நீங்கள் எப்படி டிரஸ்டி பாத்தியதையை அமுலுக்குக் கொண்டு வருவீர்கள்? வெறுந்தூண்டுதலின் மூலமாகவா?

விடை:—வெறும் வாய்த்தூண்டுதல்களின் மூலமாக மட்டுமல்ல; சில முறைகளையும் கையாள்வேன். சிலர் என்னைப் பெரிய கலகக்காரன் என்று கூறியிருக்கிறார்கள். அது பொய்யாயிருக்கலாம். ஆனால் நான் அஹிம்சைப் புரட்சிக்காரன். என்னுடைய வழி ஒத்துழையாமை வழியே யாகும். எவரும், சம்பந்தப்பட்ட ஜனங்களின் ஒத்துழைப்பின்றி, பணத்தைச் சேகரிக்கமுடியாது.

வினு:—முதலாளிகளின் டிரஸ்டிகள்யார்? அவர்களுக்கு ஏன் கமிஷன் கொடுக்கப்படவேண்டும்? இந்தக் கமிஷன் தொகையை நீங்கள் எப்படி நிர்ணயம் செய்வீர்கள்?

விடை:—பணம் அவர்களிடத்தில் இருப்பதால் அவர்கள் கமிஷன் பெற உரிமையுடையவர்கள். வெரும் அவர்களை—முதலாளிகளை—டிரஸ்டிகளாக நியமிக்கவில்லை. அவர்களை டிரஸ்டிகளாக இருக்கும்படி நானே கேட்கிறேன். பணத்தையோ, நிலத்தையோ சொந்தமாக உடைய அனைவரையும் டிரஸ்டிகளாக இருக்கும்படி நான் அழைக்கிறேன். அவர்கள் எவ்வளவு கமிஷன் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று நான் கூறமாட்டேன். நியாயமானதையே எடுத்துக்கொள்ளுமாறு கூறுவேன். உதாரணமாக, முதலாளிகள் நூறு ரூபாய் சம்பாதித்தால் ஐம்பது ரூபாய் தொழிலாளர்களுக்குக் கொடுக்குமாறு நான் கூறுவேன். பத்து கோடி ரூபாய் சம்பாதிப்பவர்கள், நூற்றுக்கு ஒன்று வீதம் கமிஷன் கொடுக்குமாறு கூறுவேன். இதனால் நான் கூறும் கமிஷன் தொகை நிர்ணயமாயிராதென்று நன்கு புலப்படும்.

#### முறையில் மாறுதல்

வினு:—மகாராஜாக்களும் லேச்சவான்தார்களும் பிரிட்டிஷாருடன் சேர்ந்துகொண்டார்கள். உங்களுக்குப் பாமர ஜனங்களே ஆதரவு அளித்திருக்கிறார்கள். இதனால், பாமர ஜனங்கள், மேற்படியாரைத் தங்கள் சத்துருக்களாகக் கருதிக் கொண்டிருக்கிறார்கள். இந்தப் பாமர ஜனங்கள் அதிகாரத்திற்கு வந்தால், பணக்காரர்களுடைய தலைவிதியை நிர்ணயிப்பார்களானால்அவர்களுடைய போக்கு எப்படிப்பட்டதாயிருக்கும்?

விடை:—லேச்சவான்தார்களையும், மற்றபடி இலாபஞ் சம்பாதிக்கிறவர்களையும் பாமர ஜனங்கள் தங்கள் சத்துருக்களாகக் கருதவில்லை. ஆனால் முன்னவர் தங்களுக்குத் தீங்கிழைக்கிறார்கள் என்ற உணர்ச்சியை இவர்களிடம் எழுப்பவேண்டும். முதலாளிகளைத் தங்கள் சத்துருக்களாகக் கருதும்படி நான் பாமர ஜனங்களுக்குப் போதிப்பதில்லை. பிரிட்டிஷாரோ, தனபதிகளோ கெட்டவர்களென்று ஒத்துழையாமைக்காரர்கள் ஜனங்களுக்குப் போதிக்கவில்லை. ஆனால் அவர்கள் ஒருவித ஆட்சி முறைக்கு இரையாயிருக்கிறார்கள் என்றே கூறி வந்தார்கள். இந்த முறையை ஒழிக்க வேண்டுமென்று கூறப்படுகிறது. இதனாலேயே, சுதந்திர ஆவல் கொண்ட ஜனங்கள் மத்தியில் பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்கள் மிகவும் க்ஷேமமாக வாழ்கிறார்கள்.

வினு:—நீங்கள் ஒரு முறையைத் தகர்க்க வேண்டுமானால், இந்திய முதலாளியென்றும் ஐரோப்பிய முதலாளி யென்றும் வேற்றுமை பாராட்டக்கூடாது. ஜமீன்தார்களுக்கு வரிசெலுத்தக்கூடாதென்று முறையை நீங்கள் ஏன் அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரக்கூடாது?

விடை:—ஒரு முறையின் கருவியாகவே ஜமீன்தார் இருக்கிறார். பிரிட்டிஷ் முறைக்கு விரோதமாக ஓர் இயக்கத்தை நடத்தி வரும் அதே சமயத்தில் ஜமீன்தார்களுக்கு விரோதமான இயக்கத்தையும் நடத்த முடியாது. இரண்டு பெருக்கும் வேற்றுமை பாராட்ட முடியும். ஆனால் ஜமீன்தார்கள் தங்களுக்குக் கிடைக்கும் பணத்தை அரசாங்கத்துக்குச் செலுத்துகிறார்களாதலின், ஜமீன்தார்களுக்குப் பணஞ் செலுத்த வேண்டாமென்று கூற வேண்டியிருக்கும். ஆனால், குடியானவர்களிடத்தில் சரியாக நடந்துகொள்ளுகிற வரை, ஜமீன்தார்களிடத்தில் நமக்குச் சச்சரவு இல்லை.

வினு:— விவசாயிகளையும் தொழிலாளிகளையும் அதிகாரத்திலிருத்தி வைக்க, நீங்கள் என்ன வேலைத் திட்டத்தை அனுஷ்டிக்கப் போகிறீர்கள்?

விடை:—காங்கிரஸ் வேலைத் திட்டமே என்னுடையவேலைத் திட்டம். இந்த வேலைத் திட்டத்தின் பயனாகக் குடியானவர்களின் நிலைமை மிகவும்உயர்ந்திருக்கிறது. பொருளாதார அபிவிருத்தியைக் காணவிட்டாலும் அவர்களுக்குள்ளே ஒருவித விழிப்பு ஏற்பட்டிருக்கிறது. இதனால்அவர்கள் அநியாயத்தையும்பொருள் சுரண்டலையும் எதிர்க்கக்கூடும்.

வினு:—இந்திய விவசாயிகள் ஐந்நூறு கோடி ரூபாய்வரை கடன் பட்டிருக்கிறார்கள். இதனை நீக்க நீங்கள் என்ன வழிதேடியிருக்கிறீர்கள்?

விடை:—இவ்வளவு தான் நிர்ணயமாகக் கடன் இருக்கிறதென்று வெருக்கும் தெரியாது. காங்கிரஸ் அதிகாரத்தைப் பெற்றால், குடியானவர்களின் கடன் விஷயங்களைப் பற்றிக் கட்டாயம் ஆலோசனை செய்யும்.

## சட்ட மறுப்பே?
## அடக்கு முறையோ?

### காங்கிரசின் பலத்தைக் காண்பிக்கக் காந்தியடிகளின் தீர்மானம்

சென்ற வாரத்து "யங் இந்தியா" பத்திரிகையில் ஸ்ரீமான் மகாதேவ தேசாய் எழுதியுள்ள ஒரு கட்டுரையின் சாரம் வருமாறு:—

"தற்போதைய நிலைமையில் சர்வகட்சி மகாநாடு முறிந்து போய் விட்டதென்றே கூறவேண்டும். எவ்வித நம்பிக்கையான முடிவும் ஏற்படாதென்றே தோன்றுகிறது. ஆனால் இந்தச் சங்கடமான நிலைமை ஏற்படாதபடி உங்களிற் சில பெரியோர் முயற்சி செய்து வருகின்றனர். அவர்களுடைய முயற்சி பலியாமற் போய், மகாநாடு ஒரு குழப்பத்தில் முடிந்து விடுமேயானால், இந்தியாவில் ஆயிரக்கணக்கான பேர் துன்பத்தை ஏற்கச் சித்தமாயிருக்கின்றனர்; அடக்கு முறைக்குச் சிறிதும்பின்வாங்கார்கள். சென்றஆண்டில் பிரயோகிக்கப்பட்ட அடக்கு முறையைக் காட்டிலும் இது பதின்மடங்கு அதிகமாயிருக்குமென்றே தோன்றுகிறது. ஆனால் இந்த விருபத்தினைப்பிரயோகத்தினின்று மனித சமூகம் காப்பாற்றப்படவேண்டும் என்றே நான் பிரார்த்திக்கிறேன்."

வெஸ்ட்மினிஸ்டர் பள்ளிக்கூடத்திலநடைபெற்ற ஒரு பொதுக்கூட்டத்தில் காந்தியடிகள் இங்ஙனம் பேசினர். சிறுபான்மையோரெல்லோரும் சேர்ந்துகொண்டு செய்துகொண்டதாகச் சொல்லப்பட்ட ஓர் உடன்படிக்கையை மனதில் வைத்துக்கொண்டே காந்தியடிகள் இங்ஙனம் பேசினர். அரசாங்கத்தினரால் தெரிந்தெடுக்கப்பட்ட இவர்கள் இங்ஙனம் ஒருவித உடன்படிக்கைக்கு வந்துவிட்டதாகச் சொல்லப்படுவது ஆச்சரியமாயிருக்கிறது. சர்தார் உஜ்ஜல்சிங் முதலியோர் இதைப்பற்றிப் பலமாகக் கண்டித்தனர். பிறருடைய சொத்தை வேறு சிலர் தாராளமாகப் பங்கிட்டுக் கொள்வதைப் போல் இருக்கிறது இஃது என்று இவர் கூறினர். காந்தியடிகளும் இதைப்பலமாகக் கண்டித்தார்.

#### வேறு வழியில்லை

சமீபத்தில் ஒரு பத்திரிகை நிருபரிடம் காந்தியடிகள் பின்வருமாறு கூறினர்:—

சர்வகட்சி மகாநாடு முறிந்துபோய் விட்டால், மீண்டும் இந்தியாவில் சட்ட மறுப்பியக்கம் தொடங்கப்படுமென்பது நிச்சயம். இதைத் தவிர வேறு வழியில்லை. இப்பொழுது நாம் கோரியதை அடையாவிட்டால் பின்னர் அது தள்ளிக்கொண்டு தான் போகும். அதிக நம்பிக்கைக்கு இடமில்லையாயினும், கடைசி சமயத்தில் கூட ஒரு பரிகாரம் ஏற்படாதென்ற அவநம்பிக்கையையும் நான் கொள்ளவில்லை. எல்லாவித முறைகளையும் கையாண்டு பார்த்துவிடுவதாகவே நானும் தீர்மானித்திருக்கிறேன்.

காந்தியடிகளின் பேச்சைப் படித்தவர்கள் நம்முடைய நுழைக்கே இருக்கும் தடைகள் என்னென்ன வென்பதை உடனே தெரிந்து கொள்வர். பிரதிநிதிகளுக்குள் நடைபெறும் சம்பாஷணைகள் எங்கோக்கத்தைக் குறிக்கொண்டிருக்கின்றன வென்பதை நான் கூற வேண்டியதில்லை. காந்தியடிகள் கூறுகிற மாதிரி நாம் முட்டாள்களாகவே நடந்து கொண்டோம். ஆனால் நம்முள் வேற்றுமைகள் ஏற்பட அரசாங்கத்தார் எல்லா வழிகளையும் செய்தனர். காங்கிரஸ் தான் தேசம்; அதுவே பெரும்பான்மையான கட்சி. மற்றக் கட்சியினரின் அபிப்பிராயங்களை யெல்லாம் கேட்டுவிட்ட பிறகு, அரசாங்கத்தார், காங்கிரசுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டும். ஆனால், தேசத்தின் பிரதிநிதியாக இருந்து பேச காங்கிரசால் முடியவில்லை போலும்!

"நான் திரும்பிச் சென்று வெறுங் துன்பஞ் சகித்தலினால், காங்கிரஸ் ஒன்றுதான தேசத்தின் பிரதிநிதியாக விளங்குகிறது என்று நிரூபிக்கப் போகிறேன்."

என்று காந்தியடிகள் கூறியது ஈண்டு நினைவுக்கு வருகிறது. லண்டன் பொருளாதார சங்கக் கூட்டத்தில் அடிகள் பின் வருமாறு கூறினர்:—

"இந்தியாவின் உண்மையான நிலைமையைப்பற்றிச் சிறந்த இங்கிலீஷ்காரரிடத்தும் அறியாமை குடிகொண்டிருக்கிறது. இந்தியாவுக்குப் பிரிட்டிஷார் ஏராளமான நன்மைகளைச் செய்து விட்டார்களென்றும், ஆனால் இந்தியர்கள் நன்றி கெட்டவர்களாயிருக்கிறார்களென்றும் அவர்கள் கருதுகிறார்கள். உத்தியோகஸ்தர்கள் மாத்திரம் இப்படி நினைக்கவில்லை. பொதுஜன அபிப்பிராயத்தின் பிரதிநிதிகளாயுள்ளவர்கள் கூட இப்படியே கருதுகிறார்கள்."

'நீங்கள் கூறுகிறபடி இந்தியாவில் அதிகமானவறுமைகுடிகொண்டிருக்கும்பட்சத்தில் ஏன் கலகங்களும் குழப்பங்களும் உண்டாகவில்லை" யென்று காலஞ்சென்ற சரோஜினிநாத் பானர்ஜியைச்சில பிரிட்டிஷார் கேட்டனராம். இப்பொழுதுள்ள பிரிட்டிஷாரும் அதே மனதுடையவரா யிருக்கின்றனர். அஹிம்சா தர்ம முறை அவர்களுக்கு மெதுவாகவே தெரிகிறது. சென்ற வருஷத்தில் இந்தியாவில் நடைபெற்ற சம்பவங்களை விட விசேஷ சம்பவங்கள் நடைபெறவேண்டும் போலும்! "இந்தியாவின் மீது அந்நிய நாட்டார் படையெடுத்து விடுவர்; உள்நாட்டுக் குழப்பங்கள் நேரிடும்" என்ற விஷயங்கள் அவர்கள் மனதில் நன்றாக ஊறியிருக்கின்றன. இதனால் பிரிட்டிஷார் பாதுகாப்பின்றி இந்தியர்கள் வாழமுடியாதென்ற எண்ணம் சாதாரண பிரிட்டிஷாருக்கு இருக்கிறது.

#### இங்கிலாந்தில் சுதேசியம்

சாதாரணமாக, ஆள்வோர் என்போர், தங்களுக்கென்று சில விசேஷ உரிமைகளை வகுத்துக்கொண்டு, ஆளப்படுவோருக்குச் சாதாரண உரிமைகளைக்கூட வழங்க மறுக்கின்றனர். இங்கிலாந்தின் எல்லாப் பாகங்களிலும், கடைகள், டிராம்கள், பஸ்கள் முதலிய எல்லா இடங்களிலும், பிறநாட்டுச் சாமான்களை விலக்கிப் பிரிட்டிஷ் சாமான்களையே வாங்குமாறு விளம்பரங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் இந்தியாவிலோ, சுதேசி சாமான்களை வாங்குங்கள் என்று சொன்னால், அஃது இராஜத் துரோகமாகக் கருதப்படுகிறது. தங்களுக்குள்ளேயே சண்டை போட்டிருக்கும் ஒரு சமூகத்தார், எப்படி சுதந்திரம் கேட்கலாமென்று ஒரு ஸ்திரீ, பொதுக்கூட்ட மொன்றில்கேட்டார். "சுதந்திரம் பெறுவதற்குத் தகுதியுள்ளவர்களாக வேண்டாமா?" என்று அவ்வம்மையார் கம்பீரமாகக் கேட்கிறார். ஆள்வோரிடத்தில், எப்பொழுதும் தாங்கள் ஆளுஞ் சமூகத்தார் என்ற கர்வம் குடிகொண்டிருப்பது உண்டு; பல தப்பெண்ணங்கள் நிறைந்திருப்பதுண்டு. ஒரு சிறு கூட்டத்தில் காந்தியடிகள் பேசிக்கொண்டிருந்தபோது, ஸ்ரீமான் ஜே. டெவ்லின் என்ற ஐரிஷ் தேசபக்தர், பின்வருமாறு கூறியது கவனிக்கத் தக்கது:—"இந்திய நிலைமையைப்பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டுமென்று நீங்கள் கூறுகிறீர்கள். ஒரு தேசத்தின் சுதந்திர உரிமையை அங்கீகரித்துக் கொள்ள எவ்வித ஆராய்ச்சியும் வேண்டியதில்லை. அஃது அந்த தேசத்தின் பிறப்புரிமையாகும்" என்று கூறினர். "எங்களுடைய உரிமை மாத்திரமல்ல; நாங்கள் செய்த தியாகத்தினால் அதைப்பெறவும் அருகராயிருக்கிறோம்"என்று காந்தியடிகள் பதிலிறுத்தினர். ஆனால் துன்பஞ் சகித்தலென்னும் விஷயத்தில் பிரிட்டிஷார் இன்னும் அதிகபாடங் கற்றுக்கொள்ளவேண்டும் போலும்! இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஒரு சாபம்போல் இருக்கிறதென்று காந்தியடிகள் ஆயிரக்கணக்கான பிரிட்டிஷாரிடத்தில் கூறிவருகின்றனர். இதனால் பயன் விளையாமற் போகவில்லை. ஆனால் இந்தப் பயன் மெதுவாகவே உண்டாகும். ஆனால் இந்தியாவில் ஏழை மக்கள் வறுமையால் வாடி மரண மடைந்து கொண்டிருக்கும் போது, பிரிட்டிஷாரிடத்தில் குடிகொண்டிருக்கும் இந்த அறியாமை வருந்தத் தக்கதாகவே இருக்கிறது. இதனாலேயே, இலட்சக்கணக்கான பேர், மெதுவாக இறந்து கொண்டிருப்பதைவிட அவர்களை அப்படியே தியாகஞ் செய்வது நல்லதென்று காந்தியடிகள் கூறுகிறார்.

"இந்திய ஏழை மக்களின் விடுதலையைச் சிந்தியாமல் நான் வாழமுடியாது. ஆனால் நமது எதிரிகளின் இரத்தத்தால் நம்மை அசுத்தப் படுத்திக் கொள்ளக் கூடாது; அசத்தியத்தில் இறங்கக்கூடாது. இவ்விரண்டுமே எங்களுடைய திடநிலைகள். இந்தியாவிலுள்ளகிராமவாசிகளுக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடாமல் நாங்கள் சிறிதும் அமைதியாயிருக்க முடியாது."

இது காந்தியடிகள் வாக்கு.

---

ஆகாயத்தில் பத்து மைல் உயரத்தில் மணிக்கு 700 அல்லது 800 மைல் வீதம் பறக்கக்கூடிய ஓர் ஆகாய விமானம், பர்லினில் கட்டப்பட்டு முடிந்துவிட்டது.

0 0 0

ஹாந்தவாடிபியோப்புவை என்ற ஊரில் சென்ற ஞாயிற்றுக்கிழமை சாயந்திரம் ஸ்ரீமான்கள் எஸ். பி. முத்துசாமி, எஸ். வி. இராகவன் எ. டி. காசி ஆகியோர் அனைவரும் கதர் அணியவேண்டியது பற்றியும் மதுபானத்தாலுண்டாகும் கேடுகளைப் பற்றியும் பேசினர்கள் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.



## வெளிநாட்டு வர்த்தகம்

சமீபத்தில் சென்னை ரானடே மண்டபத்தில் ஸ்ரீமான் வி. இராமதாஸ் பந்துலு நிகழ்த்திய ஒரு சொற்பொழிவை யொட்டி, இக்கட்டுரை வரையப்பட்டது:—

நம் பரதகண்ட பிற அந்நிய நாடுகளுடன் ஆண்டுதோறும் சுமார் 600 கோடி ரூபாய்க்கு வியாபாரம் செய்து வருகின்றது. இப்பெருந் தொகையில் சுமார் 90 கோடி ரூபா வர்த்தகமே இந்தியர் கைகளில் இருக்கின்றது. இதற்குக்காரணங்கள்பல. முக்கியமாக நாணய மாற்று விகிதமும், நாணய மாற்று பாங்குகளின் போக்கும், போக்குவரத்துச் சாதனமாகிய கப்பல்கள் அந்நியர்களிடமிருப்பதும், இந்திய வணிகர் அந்நிய இன்ஷூரன்ஸ் கம்பெனிகளில் தங்கள் சரக்குகளை இன்ஷூரன்ஸ் செய்யவேண்டிய ஏற்பாடுகளுமே யாகும்.

#### நாணயமாற்று பாங்குகள்

வெளிநாட்டு வாணிபமாகிய ஏற்றுமதி, இறக்குமதி யாவும் ஆங்கில நாட்டு நாணயத்தில் நடைபெறுகின்றன. இம்முறை எந்நாட்டிலும் கிடையாது. அமெரிக்காவில் அந்நாட்டின் நாணயமாகிய டாலரிலும், ஜப்பானில் என்னிலும் பிரான்சில் பிராங்குகளிலும் ஜர்மனியில் மார்க்குகளிலுமே வர்த்தகம் நடைபெறுகின்றது. நம் நாட்டில் மாத்திரமே ரூபாயைத் தள்ளிப்பவுனில் வியாபாரம்நடைபெறுகின்றது. இதற்குக் காரணம் வெளி நாட்டு வியாபாரம் முழுவதும் அந்நியர் கைகளிலிருப்பதே. அவர்கள் லண்டன் மார்க்கெட்டின் பணம் குறைந்த வட்டிக்குக் கிடைப்பதால் பவுனிலேயே வியாபாரம் செய்ய விரும்புகின்றனர். இதனால் இந்தியக் கூட்டுறவு பாங்குகளுக்கு வெளி நாட்டு வியாபாரத்தில் சிறிதும் இடமில்லாது போய் விட்டது. ஆகவே நாணய மாற்று பாங்குகள் ஏற்பட்டன. நம் நாட்டில் இப்பொழுது மொத்தம் 18 நாணய மாற்று பாங்குகளிருக்கின்றன. அவைகள் யாவும் அந்நியருடையனவே. இதற்குக் காரணம் முதலில் வெளி நாட்டு வியாபாரம் அந்நியராகிய கிழக்கிந்தியக் கம்பெனியாரிட மிருந்ததே. அக்கம்பெனி ஏற்பட்டதும் நாணய மாற்று பாங்குகள் முளைத்தன. இப்பாங்குகளில் 8 ஆங்கிலேயருடையது. 3 ஜப்பானியருடையது. அமெரிக்கருக்கும், பிரஞ்சுக்காரருக்கும் தனித்தனியே இரண்டும், போர்ச்சு கீசியருக்கும் உலாந்தா நாட்டினருக்கும் பெல்ஜியம் நாட்டினருக்கும் தனித் தனியே ஒரு பாங்கு மிருக்கின்றன. இப்பாங்குகள் தங்கள் உயர்தர உத்தியோகங்களுக்கு இந்தியர்களை எடுத்துக் கொள்வதில்லை. இப்பாங்குகள் எப்பொழுதும் இந்தியர் அபிலாஷைகளை எதிர்த்தே வருகின்றன. இம்பீரியல் பாங்கு நிறுவப்பட்ட காலத்திலும் மாகாண பாங்குகள் மூன்றுக்கப்பட்டகாலத்திலும் அம்முறையை எதிர்த்தன. தவிர எதாவது ஓர் இந்திய நாணயமாற்று பாங்கு ஏற்படுத்தினால் உடனே போட்டிப் போட்டு புதுப்பாங்கை அழுத்த முயல்கின்றன. இம்பீரியல் பாங்குக்கு லண்டனில் கிளையிருக்கும் இவைகள் அரசாங்கத்தினரின் கடன்களைக்கூட அதன் மூலமாக செலுத்தாதபடி நாளதுவரை எதிர்த்து வருகின்றன. இவைகள் எப்போதும் ஐரோப்பிய வணிகக்கழகத்துடன் சேர்ந்துகொண்டு இந்தியாவின் அபிவிருத்தியை எதிர்த்துவருகின்றன.

இந்தியர், சாமான்களை இறக்குமதி செய்யும்பொழுது அச்சாமான்களின் மதிப்பில் 100க்கு 15 வீதம் தங்கள் லண்டன கிளையில்முன் பணமாகச் கட்டவேண்டுமென்று நிர்ப்பந்திக்கின்றன. அந்நியர் தங்கள் சரக்குகளை இந்நாட்டுக்கு அனுப்பும்பொழுது தாங்கள் பணம்பெற்றுக்கொள்ளும்சீதையுமுன்ன சேயே பூர்த்திசெய்து இப்பாங்குக்குக்கொடுக்கின்றனர். இப்பாங்குகள் தங்கள் பணத்திலிருந்து அவ் வியாபாரிக்குப் பணத்தைக் கொடுத்துவிடுகின்றன. இந்திய வியாபாரியோ தான் அத்தொகையைத் தருவதாகவும் அத்தொகைக்கு அச்சரக்குகளையும், தான் லண்டனில் கட்டியுள்ள பணத்தையும் ஜாமீனாகக் காண்பிக்கின்றான். சரக்குகளின் பெறுமானத்தொகை லண்டன் போய்ச்சேரும்காட்கள்வரை அவன் அதற்கு 100-க்கு 7 வீதம் வட்டி கொடுக்கின்றான். இப்படியாக இந்தியர்கள் வருஷத்தில் 4 மாதங்களுக்குச் சுமார் 250 கோடி ரூபாய்க்கு வட்டிகொடுக்கின்றனர். 1929-ம் ஆண்டில் இவ்வட்டியின் விகிதம் 100-க்கு 7 வீதம் இருந்தது. இக்கடவடிக்கை முழுவதும் நாணயமாற்று பாங்குகள் மூலமாகவே நடைபெற வேண்டியிருப்பதால் அவைகள்முழுலாபத்தையும்அடைகின்றன.

மற்ற நாடுகளில் நாணயமாற்று பாங்குகள் இருப்பதுபோன்று, அந்நிய நாடுகளில் விளை பொருள்களின் விலைகளின் ஏற்றத் தாழ்வை இவை இந்திய வணிகருக்குத் தெரிவிப்பதில்லை. ஏற்றுமதி, இறக்குமதியில் பல சந்தர்ப்பங்களில் பல காரியங்களில் ஐரோப்பியர் கமிஷன் (Brokerage) பெறுகின்றனர். இப்படியாக இந்திய நாட்டினின்றும் அந்நியருக்கு ஆண்டுதோறுஞ் சுமார் 2 கோடி ரூபாய் செல்லுகின்றது.

#### இன்ஷூரன்ஸ்

இப்பாங்குகள் இந்தியர்கள் அந்நியநாடுகளுக்குச் சாமான்களை ஏற்றுமதி செய்யும் பொழுது அந்நிய இன்ஷூரன்ஸ் கம்பெனிகளிலேயே இன்ஷூரன்ஸ் செய்ய வேண்டுமென்றும் அந்நிய நாட்டுக் கப்பல்களிலேயே சரக்குகளை அனுப்ப வேண்டுமென்றும் வற்புறுத்துகின்றன. சமீபத்தில் அரசாங்கத்தினரால் நியமிக்கப்பட்ட பாங்கு விசாரணைக் கமிட்டியார் இதைக் குறித்து அவைகளைக் கேட்டபொழுது அவைகளின் பிரதிநிதிகள் தங்களுக்கு இந்தியக் கம்பெனிகளைக் காட்டிலும் அந்நியக் கம்பெனிகள் நேராகவே நன்கு தெரியுமாதலால் இப்படி செய்வதாகவும் இந்தியக் கம்பெனிகளின் யோக்கியதைகளை குமாஸ்தாக்களின் மூலமாகவே அறிந்துகொள்ளவேண்டி இருப்பதால்தங்களுக்கு அவைகளின்மீது நம்பிக்கை இல்லையென்றும் கூறினர். சென்ற நூற்றாண்டின் இறுதியில் இந்தியாவில் இருந்த ஒரு ஐரோப்பியப் பிரபல பாங்கர் பின் வருமாறு இந்தியர்களைக் குறித்துக் கூறியதை ஈண்டு குறிப்பிடுவது நன்றாகும்.

"இந்திய பாங்கர்களில் பலருக்கு எழுதப் படிக்கக்கூட தெரியாது. இருப்பினும் அவர்கள் பெருந் தொகைகளுக்கு லேவாதேவி செய்கின்றனர். தங்களின் முழு வியாபாரத்தை அடியுடன் சொல்ப சம்பளம் வாங்கும் ஒரு குமாஸ்தாவிடம் முழு அதிகாரத்துடன் ஒப்புவித் திருக்கின்றனர். இக்குமாஸ்தாக்களிட மிருந்து ஜாமீனாக எதுவும் பெறுவதில்லை. பலதிறப்பட்ட கணக்கு வகைகளின்றிப் பெருந் தொகைகளைக் கையாண்டு வருகின்றனர். இப்படி யிருந்தும் இவர்களுக்கே மிகவும் செல்வாக்கிருக்கின்றது. ஏனெனில் இவர்களின் வணிக தர்மமானது உண்மையும், சத்யமுமே. மோசம் என்பது சிறிதும் இவர்களிடமில்லை. இந்தியர்களை எதற்கும் ஜாமீனின்றி நம்பலாம்."

அந்நிய இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் ஆண்டுக்கு சுமார் 3 கோடி ரூபாய் வரை இலாபமாக அடைகின்றன. அந்நியர் கம்பெனிகளும் இந்தியர் கம்பெனிகளும் தங்களுக்குப் பிறநாட்டில் சம்பந்தம் வைத்துக் கொள்ள இப்பாங்குகளை அறிமுகப்படுத்த (Reference) வேண்டினால் இவைகள் ஐரோப்பியரையும் இந்தியரையும் சமமாக நடத்துவதில்லை. உதாரணமாக இப்பாங்குகளினால் மிகுந்த நம்பிக்கை உடைய வரெனச்சிபார்சுசெய்யப்பட்ட ஐரோப்பியர் ஒருவர் சென்ற ஆண்டில் பம்பாயில் நம்பிக்கை மோசத்திற்காக தண்டிக்கப் பட்டார். வட்டமேஜை மகாநாட்டின் இந்திய வர்த்தசங்கத்தின் பிரதிநிதியாகிய ஸ்ரீமான் ஜி. டி. பிர்லா அவர்களை ஒரு சமயம் இப்பாங்குகள் சிபார்சு செய்ய மறுத்துவிட்டன.

இப்பாங்குகள் ஐரோப்பிய வியாபாரிகளுக்கு மாத்திரம் முன் பணம் கொடுத்து உதவிசெய்கின்றனவே ஒழிய இந்தியர்களுக்குக் கொடுத்து உதவுவதில்லை. இப்பாங்குகள் தங்கள் பங்குக்காரர்களுக்கு ஆண்டுக்கு 20 விகிதம் வட்டி கொடுத்தும் தாங்கள் இலாபமேஅடைகின்றதில்லையென்றுசொல்லுகின்றன. சிற்ச இவைகள் தாங்கள் இவ்வியாபாரத்திற்குத் தங்கள் முதலை லண்டனிலிருந்து வரவழைத்து வியாபாரம் செய்வதாக பாங்கி விசாரணைக் கமிட்டி முன்னர் கூறினர். இவர்களின் கூற்றுக்கு இதற்கு ஒருவாரம் முன்னர் நடந்த லாயிட்ஸ் பாங்கி (இதுவும் நம்நாட்டில் கிளையுள்ள ஒரு நாணய மாற்று பாங்கு) வருடாந்தக் கூட்டத்தில் அதன் தலைவர் இந்தியர்கள் தங்கள் பாங்கியில் கட்டியுள்ள பணம் இந்திய வியாபாரத்திற்கு வேண்டிய தொகையை விட அதிகமாயிருந்ததென்று கூறினர். இப்பாங்குகள் தங்களிடம் இந்திய வியாபாரிகள் கட்டியுள்ள பணத்தைக் கொண்டு அரசாங்கக் கடன் தொகை நோட்டுகளை வாங்கி அதன் வட்டியையும் அடைகின்றன.

#### இந்திய வியாபாரிகள் கடமை

வெளி நாட்டு வாணிபத்தில் இந்தியா பங்கு பெற வேண்டுமானால் முதலில் நாணய மாற்று பாங்குகள் நிறுவப் படவேண்டும். இப்பொழு திருக்கும் நிலையில் அந்நிய பாங்குகளுடன் போட்டி போடமுடியாது. ஆகையால் அரசாங்கத்தினர் உதவி செய்ய முன் வர வேண்டும். ஜப்பான் தேசத்தில் உள்ளது போன்று நம் நாட்டிலும் இப்பாங்குகள் அநுமதி (Licence) பெற வேண்டுமென்று விதி செய்ய வேண்டும். அவ்வாறு மதிப்பத்திரத்தில் அவைகள்ஜாதி வித்தியாசம்பாராட்டக்கூடா தென்றும் பெரிய உத்தியோகங்களுக்கு இந்தியர்களை வைத்துக் கொள்ள வேண்டு மென்றும் இந்திய பாங்குகளுடன் போட்டியிடக் கூடா தென்றும் அந்நிய நாட்டு பாங்குகளும் இந்திய பாங்குகளும் மிகவும் நேசமாக இருக்க வேண்டு மென்றும், கடன் பத்திரங்களுக்கும், பணலேவா தேவிக்கும் தனித் தனியே அநுமதி பெற வேண்டு மென்றும் குறிப்பிட வேண்டும். தவிர சர்வ் பாங்கு ஏற்படுத்தி இந்தியர் ஆட்சியிலும்பெரும்பாலும் ஜனப்பிரதிநிதிசபைக்கு பொறுப்புள்ளதாகச் செய்வதுடன் அதற்கு லண்டனிலும் கிளை ஏற்படுத்த வேண்டும். இந்திய அரசாங்கத்தினர் ஆண்டுதோறும் பிரிட்டனுக்குச் செலுத்தும் கடன் தொகையை, நிறுவப்படும் இந்தியநாணயமாற்று பாங்கின் மூலமாய்ச்செலுத்தினால் அதற்கு இதனால் வியாபாரத்தைத்தொடங்குவதற்கு அநுகூலமாயிருக்கும். ஆனால் இதைஇந்த அந்நிய நாட்டு பாங்குகள் எதிர்க்கின்றன. கமிட்டியின் முன் சாட்சியம் சொல்லும்பொழுது, "இவ்வளவு ஆண்டு கள்வரை நாங்கள் இந்திய அரசாங்கம், கடன் தொகையைச் செலுத்த உதவிசெய்து வந்திருக்கிறோம். இப்பொழுது எங்களிட மிருந்து அதைப் பிடுங்குவது நன்றி மறத்தலாகும்" என்று அவைகளின் பிரதிநிதிகள் கூறினர்.

இந்திய வியாபாரிகள் சுமார் 80 கோடி ரூபாய்வரை இப்பாங்கிகளில் கட்டியிருக்கின்றனர். இத்தொகை இம்பீரியல் பாங்கியின் தொகையைவிடவும் மற்ற எல்லாக்கூட்டுறவு பாங்கிகளின் தொகைகளின் மொத்தத்திற்கும் அதிகமானது. இப்பாங்குகள் இப்பொழுது வெளிநாட்டு வியாபாரத்துடனில்லாது உள்நாட்டு வியாபாரத்திலும் நுழைய ஆரம்பித்துவிட்டன. உடனே சட்டமியற்றி இதைத் தடுக்கவேண்டும். அவைகள் உள்நாட்டு வியாபாரிகளும் வெளிநாட்டு வியாபாரிகளும் தங்களிடமே கணக்கு வைத்துக் கொள்வதால் அவர்களுக்கே நன்மை என்றும் கூறுகின்றன. P. & O. பாங்கிக் கார்ப்பரேஷன் இப்பொழுது அலகாபாத் அல்லயன்ஸ் பாங்கை வாங்கி ஐக்கிய மாகாணத்தின் உள்நாட்டு வியாபாரத்தில் தலையிட்டுவிட்டது. இதற்கு நாம் மேன்மேலும் இடங்கொடுத்தால் இந்தியரின் சிறு சிறு பாங்குகளும் அடியுடன் மறைந்துவிடும்.

தவிர ஆஸ்திரேலியா நாட்டைப்போன்று கடலோர வியாபாரத்தை இந்தியருக்கு ஒதுக்கவேண்டும். நாணயமாற்று விகிதம் இந்தியருக்கு லாபமுள்ள விதத்திலிருக்க விதிக்கவேண்டும். இவ்வாறு சீர்திருத்தங்களைச் செய்தால் இந்திய இன்ஷூரன்ஸ் கம்பெனிகளும், கப்பல்கம்பெனிகளும்இலாபமடையும், நாணயமாற்றுபாங்குகளும் இந்தியரால் நிறுவப்படும். அப்பொழுது வெளி நாட்டு வர்த்தகம் தானாகவே இந்தியர் கைகளில் வந்துசேரும். கீ.

வர் கேருக்குலோசப் பார்த்துக்கொண்டனர். எதிர்காலத்தைப்பற்றி மெல்லிய குரலில் சம்பாஷித்தனர். பிறகு ஸ்ரீமான் மாக்டொனால்டு ஒவ்வொரு பிரதிநிதியுடனும் கை குலுக்கினர்.—ச-மி.

## காமன்ஸ் சபையில் இந்தியா மந்திரியின் பிரசங்கம்

சர்வகட்சி மகாநாட்டில், இந்தியாவின் வருங்கால அரசியல் அமைப்பைப்பற்றி ஸ்ரீமான் ராம்ஸே மாக்டோனல்ட் வெளியிட்ட அறிக்கையைப்பற்றிப் பிரிட்டிஷ் காமன்ஸ் சபையில் இரண்டு நாட்கள் வாதம் நடைபெற்றது. நாம் சர்வகட்சி மகாநாட்டில் வெளியிட்ட அறிக்கையைக் காமன்ஸ் சபை ஆதரிக்கவேண்டு மென்று ஸ்ரீமான் மாக்டோனல்ட் பிரேரித்து நீண்டதொரு பிரசங்கம் செய்தார். ஸ்ரீமான் சர்ச்சில், இந்தியாவின் வருங்கால அரசியல் திட்டமானது, பிரிட்டிஷ் வியாபாரத்தைப் பாதுகாப்பதாய் இருக்கவேண்டுமென்றும், சுயஆட்சி கொடுப்பதானல், இந்தியப் பொதுஜனங்களின் அமைதி, சமாதானம் முதலியவற்றின் இறுதியான பொறுப்பு பார்லிமெண்டினிடத்திலேயே இருக்கவேண்டு மென்றும் ஒரு திருத்தப் பிரேரணை கொண்டுவந்தார். இஃது இறுதியில் தோல்வியுற்றது. இந்த விவாதத்தில் ஸர் சாமியல்ஹோர், ஸ்ரீமான் லான்ஸ்பரி, ஸர் ரெஜினல்ட் கிராடாக் முதலியோர் கலந்துகொண்டனர். ஆனல் இந்தியா மந்திரியான ஸர் சாமியல்ஹோர் செய்த பிரசங்கமானது, இந்தியா விஷயத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கொண்டுள்ள உண்மையான மனேபாவமானது ஒருவாறு புலப்படுகிறதாதலின், அவர், முதல்நாள் வாதம் முடிவுறும் சமயத்தில் நிகழ்த்திய நீண்டதொரு சொற்பொழிவின் முக்கியமான சில பாகங்களைமட்டும் கீழே தருகிறோம்:—

பிரதம மந்திரியார் வெளியிட்ட அறிக்கையில் அரசாங்கத்தாரின் உத்தேசம் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. தொழிற்கட்சி அரசாங்கத்தின் சார்பாகச் சென்ற ஜனவரி மாதம் பிரதம மந்திரி கூறிய அனைத்தையும் இந்த அரசாங்கம் சரியென்று ஒப்புக்கொண்டிருக்கிறது. குறிப்பிட்ட சில நிபந்தனைகளுக்குட்பட்டு மத்திய அரசாங்கத்திலும் மாகாணங்களிலும் பொறுப்பளிக்க நாங்கள் சித்தமாயிருக்கிறோம். இவைகள் சம்பந்தமாக இரண்டு நிபந்தனைகள் கூறப்பட்டிருக்கின்றன.

முதலாவது, மத்திய அரசாங்கமானது, பிரிட்டிஷ்இந்தியாவும் சுதேச சமஸ்தானங்களும் அடங்கிய அகில இந்திய அரசாங்கமாக இருக்கவேண்டும். இரண்டாவது, இந்தியாவுடன் நாம் நெடுங்காலமாக வைத்துக்கொண்டிருக்கும் சம்பந்தத்தினுல் ஏற்பட்டுள்ள பொறுப்புகள் பாதுகாக்கப் படவேண்டும். இந்தப் பாதுகாப்புகள்நம்முடைய நன்மைக்காகமட்டு மின்றி இந்தியாவின் நன்மைக்காகவும் அவசியமாயிருக்கின்றன. சென்ற ஒருவருஷ காலமாகவே இந்த அகில இந்திய திட்டத்தைப் பற்றியே ஆலோசித்துக்கொண்டு வந்திருக்கிறோம். ஆனல், இந்த அகில இந்திய திட்டமானது, சென்ற இரண்டு வாரங்களாகப் பின்னடைந்துபோய் விட்டதென்று சிலர் கூறுகின்றனர். இஃது உண்மையல்லவென்று நான் கூறுகிறேன். அபிப்பிராய வேற்றுமைகள் ஏற்பட்டிருக்கின்றன வென்பது உண்மை. ஆறுநூறு சுதேச சமஸ்தானங்கள் அடங்கிய ஒரு பிரதேசத்தில அபிப்பிராய வேற்றுமைகள் ஏற்படாமலிருக்குமா? ஆனல் இந்த அகில இந்திய திட்டமென்பது நிலைபெற்றதாக விட்டதென்று உங்களுக்கு உறுதி கூறுகிறேன். மன்னர் சபையின் தலைவரான போபால் நவாபும், மிகப் பெரிய சமஸ்தானமாகிய ஹைதராபாத்தும் இந்தத் திட்டத்தை ஆதரித்திருக்கின்றன. இந்தச் சமஸ்தானப் பிரதிநிதிகள், அபிப்பிராய வேற்றுமைகளை அகலப்பார்த்து ஒற்றுமையான ஒரு முடிவுக்கு வருவார்கள் என்பது திண்ணம்.

### பாதுகாப்புகள்

இரண்டாவதாகப் பாதுகாப்புகள் இருக்கின்றன. இந்தியாவின் நன்மைகளையும் நமது நன்மைகளையும் கொண்டு இவைகளைப் பற்றி நாம் முடிவு செய்யவேண்டும்.

முதலாவதாக இந்தியா தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ளக்கூடிய நிலைமைக்கு வரும் வரையில், நாமே இராணுவத்தைப் பரிபாலிப்பதென்பது தெளிவாகவும் ஆட்சேபமில்லாததாகவும் இருக்கவேண்டும். அன்னிய நாட்டு விஷயங்களில் நமது ஆதிக்கம் அப்படியே யிருக்கவேண்டும். இரண்டாவதாக சுதேச மன்னர்களுடன் சம்பந்தம் கோாக மன்னர் பிரானுடனிருக்கவேண்டும். செலவிலே தகுந்தபடி பாதுகாக்கப்படவேண்டும். உள்நாட்டு அமைதிக்கு நாமே முடிவான பொறுப்பாளியாயிருக்கவேண்டும். சிறுபான்மையோர்பாதுகாக்கப்படவேண்டும். பிரிட்டிஷ் வியாபாரிகளுக்கெதிராக அநீதியாகப் பொருளாதார வியாபார விஷயங்களில் நடைகளுண்டுபண்ணக்கூடாது. இந்தியா மந்திரியால் நியமிக்கப்பட்ட சிவில் உத்தியோகஸ்தர்களின் நன்மைகள் பாதுகாக்கப்படவேண்டும்.

இந்தியாவே இராணுவத்தைப் பரிபாலிக்கும் நிலைக்கு வரும்வரை நாம் இராணுவத்தை நிர்வகிப்பது இந்தியாவின் நன்மைக்குத் ததேயாகும். இதனல் வெளியார் படையெடுப்பினின்றும்இந்தியா பாதுகாக்கப்படும். இந்தியா அமைதியாக அபிவிருத்தியடைய பிரிட்டிஷ் இராணுவத்தின் பாதுகாப்பு அத்தேசத்திற் கேற்படவேண்டியது அவசியமாகிறது.

செல்வ விஷயங்கள் சம்பந்தப்பட்டமட்டில் இந்தியா புதியஅரசியல் திருத்தத்துடன் வேலை ஆரம்பிப்பதால் இந்தியாவின் செல்வ மதிப்பு, சிறிதும் சந்தேகத்திற்கு இடமளிக்காததாக விருக்கவேண்டும். இதில் பிரிட்டிஷ் ஆதரவு இருக்கவேண்டும். மிகவும் கஷ்டமான இக்காலத்தில் அரசியல் மாறுதலேற்படும் பொழுது இந்தியாவின் செல்வ மதிப்பில் பிரிட்டிஷ் வியாபாரிகள் சந்தேகம் கொள்ளுவார்களானல் அஃது இந்தியாவுக்குப் பெரிதும் கஷ்டத்தை உண்டுபண்ணக்கூடும். இந்த பிரிட்டிஷ் வியாபாரிகள் விஷயத்தில் இந்தியா வெகுதூரம் கட்டுப்பட்டிருக்கிறது. இந்தியாவின் அபிவிருத்திக்கு அவசியமான மூலதனம் இந்த வகுப்பினிடமிருந்தே கிடைக்கக்கூடும்.

என்னல் குறிப்பிடப்பட்ட இருவித உதாரணங்களிலிருந்தும், பாதுகாப்புகள் என்பன இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்தைத் தடைப்படுத்த ஏற்படவில்லை யென்பதும், இந்தியாவிற்கு மாத்திரமல்லாது நம்முடைய நன்மைகளையும் பாதுகாப்பதற்கு அவசியமான ஏற்பாடுகள் என்செய்யவேண மென்பதையே நாம் மனதில் எண்ணிக்கொண்டிருக்கிறோம் என்பதும் விளக்கும்.

நாம் உத்தேசிக்கும் இந்தப் பாதுகாப்புகள் இந்தியாவின் எதிர்காலத்தில் தடைகளாக இருக்கமாட்டா. இந்தியாவில் ஏற்படப்போகிற அரசியல் திட்டமானது கிரமமான வழியிலும், பந்தோபஸ்திற்குரியதாகவும் வேலைசெய்ய இந்தப் பாதுகாப்புகள் இல்லாவிட்டால் சரிப்படாது. நான் குறிப்பிட்ட வண்ணம் அகில இந்திய பெடரேஷனும் ஏற்பட்டு, பாதுகாப்புக்களுமியமான விலக்குகளையும் அமைத்துவிட்டால், நான் விரிவுபடுத்திய வண்ணம் அமுலுக்கு வரும் அரசாங்கம் தற்சமயம் இந்தியாவிலிருக்கும் அரசாங்க அமைப்பைக்காட்டிலும் பலமாயிருக்குமென்பதில் சந்தேகமில்லை.

### தற்போதைய அரசாங்கம்

நான் இந்தியா மந்திரியானவுடன் சில வாரங்களுக்குள் இந்தியா அரசாங்கத்தில் இரண்டு முக்கிய குறைகளிருப்பதைக் கவனிக்க நேர்ந்தது. இந்திய நிர்வாகப் பொறுப்பு பெரிதும் ஓரிடத்தில் குவிந்திருக்கிறதென்பது முதல் விஷயம். ஆரம்பத்தில் ஜனங்களுடைய தேவைகள் குறைவாயிருந்து அரசாங்கத்தின் பொறுப்புமாத்திரம் அதிகமாயிருந்தது. அப்பொழுது சர்வ அதிகாரமும் மத்திய அரசாங்கத்திடம் இருந்தது. அஃது ஒரு சமயமாக வில்லை. இக்காலத்திலும் அந்த அதிகாரம் முழுவதையும் ஓரிடத்திலேயே சுமத்திவைப்பது சாத்தியமாகுமா என்று யோசிக்கவேண்டும்.

இதைத்தவிர மற்றொரு காரணமுமிருக்கிறது. இந்தியா அரசாங்கம், தற்போது உத்தியோகஸ்தர், நியமனம் செய்யப்பட்டவர் ஆகிய இருபாலரையும்கொண்டு நடந்து வருகிறது. இதனல் என்ன ஏற்படுகிறதென்றல், இந்தியாவிலுள்ள அரசியல் கட்சிகள் எக்கட்சியினராயிருப்பினும், அவர்கள் எதிர்க்கட்சியினர் என்ற பொறுப்பற்ற நிலைமையிலிருக்க நேரிடுகிறது. இதனல் அரசாங்கத்திற்கும் உதவியில்லாமல் போய்விடுகிறது.

இந்த நிலைமைமாறி இந்தியாவின் அரசியல் முன்னேற்றத்தின் பயனுக அரசியல் கட்சியினர் எவ்விதக் கொள்கையினராயிருப்பினும் தங்கள் செய்கையின் பலனுக்கு தாங்களும் ஒரு சமயம் அரசாங்கத்தை நிர்வகிக்கும் பொறுப்பு வகிக்கவேண்டிவரும் என்ற உணர்ச்சி தோன்றி பொறுப்புடன் வேலை செய்ய வழி ஏற்படுத்த வேண்டுமென்பது என்கருத்து. என்அபிப்பிராயம் சரியென்று தோன்றினல் நாம் செய்ய வேண்டியது யாதென்பதை இனிக் கூறப்போகிறேன். முதலில் அகில இந்திய சட்ட சபையும் நிர்வாக சபையும் ஏற்படவேண்டும். இவற்றில் எதுவும் மிகப் பெரியதாகவிருக்குமென்று எண்ணுகிறேன். இவை இரண்டும் எத்தகைய அகில இந்திய சம்பந்தமான காரியங்களைச் செய்யவேண்டுமென்பதைத் தெளிவாகக் குறிப்பிட்டு விடவேண்டும்.

இரண்டாவதாக மாகாணங்களுக்குக் கூடிய வரையில்சுதந்தரமளித்து அந்தந்த மாகாணத்திற்கேற்ற அபிவிருத்தியை காட வழி தேடவேண்டும். இந்த ஏற்பாட்டிற்கு அடிப்படையாகப் பாதுகாப்புகளேற்படுத்தப்படவேண்டும். இப்பாதுகாப்புகளில்லாவிடில் பிரிட்டிஷ் இந்தியாவோ, இந்தியாவின் பாதுகாப்போ, நாணயமோ நீடித்திராது. இவற்றைச் செய்வதே நம் நோக்கமாக விருக்கவேண்டும். இந்த நோக்கமே பிரதமமந்திரியினுல் வெளியிடப்பட்ட அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

### கொள்கைகளை அமுலுக்குக்கொண்டு வருவதெப்படி?

அரசாங்கத்தாரின் கொள்கைகளைப்பற்றி இது காறும் கூறினேன். இனி அவைகளை எப்படி அமுலுக்குக் கொண்டு வருவது என் பதுபற்றிச் சிறிது கூறுகிறேன். இந்த அமுலுக்குக்கொண்டு வரும் விஷயத்தில், பார்லிமெண்டின் பொறுப்பு கவனிக்கப்படாதென்று சிலர் கருதுவதாகத் தெரிகிறது. இதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. இறுதியான அதிகாரம் இந்தச் சபைக்குத்தான் இருக்கவேண்டும். சட்ட புத்தகத்தில் நிரந்தரமாகப் பதியப்படும் எந்த மசோதாவும் லார்ட்ஸ் சபை, காமன்ஸ் சபை ஆகிய இரண்டு சபைகளிலும் எல்லாபடிகளிலும் நிறைவேற வேண்டும். ஆனல் மகாநாடுகளிலும், பரஸ்பரம் ஒருவர்க்கொருவர் கலந்து பேசிக்கொள்வதினுலும் பல நன்மைகள் இருக்கின்றனவென்பதை அங்கத்தினர்கள் உணர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த முறையினுல் இந்தியப் பிரதிநிதிகளின் உண்மையான அபிப்பிராயத்தை நாம் தெரிந்துகொள்ள முடிகிறது.

நாம் இரண்டொரு கமிட்டிகளை நியமிக்க வேண்டியிருக்கிறது. வாக்குரிமையை நிர்ணயிப்பதைப்பற்றி ஒரு கமிட்டி நியமிக்கப்படவேண்டும். குறிப்பிட்ட முறையில் இந்தக் கமிட்டி வேலை செய்யவேண்டும் என்று இதற்கு நாம் கூறவேண்டும். இப்பொழுது எந்தெந்த இடங்களில் தனித்தொகுதிகள் இருக்கின்றனவோ அவைகள் அப்படியே இருக்கவேண்டுமென்று பிரதம மந்திரி கூறியதை இக்கமிட்டிக்கு நாம் எடுத்துக்கூறவேண்டும்.

பந்தோபஸ்து சம்பந்தமாக பிரிட்டிஷ் இந்தியாவுக்கும் சுதேச சமஸ்தானங்களுக்கும் எத்தகைய சம்பந்தம் இருக்கவேண்டு மென்பதைப்பற்றி விசாரிக்க ஒரு கமிட்டி நியமிக்கப்படவேண்டும். இந்த மாதிரியான கமிட்டிகளின் சிபார்சுகள், பார்லிமெண்ட், இந்தியாவைப்பற்றி ஒருவித முடிவுக்குவருவதற்கு அநுகூலமாயிருக்கும்.

### பிரதம மந்திரியின் அறிக்கை யைப்பற்றிக் காந்தியடிகள்

4-12-31 இரவு மகாத்மா காந்தி லண்டனிலுள்ள தமது நைட்ஸ்வாராவதி காரியாலயத்தில் கணப்புச் சட்டியின் பக்கத்தில் தரையில் உட்கார்ந்துகொண்டு சுமார் நாற்பது பத்திரிகைப் பிரதிநிதிகளுக்குப் பேட்டி கொடுத்துப் பேசினர். இந்த நாற்பது பிரதிநிதிகளும் கீழேயே உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். பின்னர் அடிகள் கூறியதாவது:—

பிரதம மந்திரியின் அறிக்கையைப்பற்றி யாவது, அதன்மீது காமன்ஸ் சபையில் நடைபெற்ற விவாதத்தைப்பற்றியாவது நான் ஒரு நிர்ணயமான அபிப்பிராயத்தைக் கூற முடியாதவனுயிருக்கிறேன். ஆனல் அப்படி முடிவான அபிப்பிராயம் கூறுவதற்கு முன்னர், அறிக்கையையும், காமன்ஸ் சபைவாதத்தையும் நன்ருக அறிந்துகொள்வதற்கு எல்லா முயற்சிகளையும் செய்யப்போகிறேன். ஆனல் நான் எந்த முடிவுக்கு வந்தபோதிலும் அது முதலில் காங்கிரஸ் காரியக்கமிட்டியின் அங்கீகாரத்திற்கு அனுப்பப்படும். அஃது அங்கீகரித்தாற்றுன் என் அபிப்பிராயத்திற்கு மதிப்பேற்படும். நான் இந்தியா சென்றடைந்து, காங்கிரஸ் காரியக்கமிட்டியுடன் கலந்தாலோசிக்கிற வரை, பிரதம மந்திரியின் அறிக்கையை யொட்டி சட்டமறுப்பியக்கம் ஆரம்பிக்கப்படாது. புதிதாக அமுலுக்குக் கொண்டுவரப்பட் டிருக்கும் வங்காள அவசரச்சட்டம் அப்படியே அமுலுக்குக் கொண்டுவரப்பட்டால், குறித்த ஒரு ஸ்தலத்தைப் பொறுத்தமட்டிலோ அல்லது தேசம் முழுவதிலுமோ சட்ட மறுப்பியக்கம் தொடங்கப்படலாம். ஆனல் மீண்டும் சட்டமறுப்பியக்கத்தை ஆரம்பிக்க வேண்டுமென்று கூறவனுல் மிகுந்த பொறுப்புடனேயே கூறவேண்டும். ஆதலின் மேலெழுந்தவாரியாகச் சட்டமறுப்பை ஆரம்பித்து விடுங்கள் என்று நான் கூறிவிடமாட்டேன். வங்காள அவசரச்சட்டம் போன்ற அடக்குமுறை ஆரம்பிக்கப்பட்டால், எந்த நிமிஷத்திலும் தேசம் முழுவதும் சட்டமறுப்பு இயக்கம் தொடங்கப்படலாம். வங்காள அவசரச்சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்ததற்கு எவ்வித நியாயமுமே இல்லை. நம்முடைய பலத்திற்குத் தகுந்த அளவுதான் நாம் உரிமையைப் பெறுவோம் என்பது என் கருத்து. இப்பொழுது அதிகாரத்தி லுள்ளவர்களின் பலத்தையும் நம்முடைய பலத்தையும் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு, இந்தச் சர்வகட்சி மகாநாடு ஒரு வழியாக இருந்தது. அநேகமாக நாம் தவறிவிட்டோம் என்றே கருதுகிறேன். ஆதலின் காங்கிரஸ் தன் சக்திகளை மீண்டும் சேகரித்துக் கொள்ளவேண்டும்.

நான் இங்கிலாந்துக்குவந்தது நல்லதுதான். சர்வகட்சி மகாநாட்டுக்குள் நான் செய்த வேலையைக் காட்டிலும் வெளியே செய்த வேலையே பயன்படத் தக்கதாயிருந்தது. சமரஸமாகவும் பொது ஜன அபிப்பிராயத்தைக் கேட்டும் அரசாங்கத்தார் நடந்துகொள்வாரானல், நான் சமரஸ முயற்சிகளைத் தொடங்கி நடத்தச் சித்தமாயிருக்கிறேன். அப்பொழுது, மனப்பூர்வமாக ஒத்துழைக்கும் படியே நான் கூறுவேன். ஸ்ரீமான் சர்ச்சில் முதலியவர்களை நான் சந்திக்கமுடியாததுபற்றி வருந்துகிறேன். 28-12-31-ல் நான் இந்தியா போய்ச் சேருவேன் என்று எதிர்பார்க்கிறேன்.

### சர்தார் படேலின் கருத்து

பிரதம மந்திரியின் அறிக்கையைப்பற்றிக் காங்கிரஸ் தலைவரான சர்தார் படேல் பின்வருமாறு அபிப்பிராயங் கூறினர்:—

இதைப்பற்றி நான் ஒன்றும் அபிப்பிராயம் கூறுவதற்கில்லை. காங்கிரஸ் பிரதிநிதியாக ஒருவரே இருக்கிறார். அவர் இந்தியாவுக்குத் திரும்பி வருகிற வரை, அபிப்பிராயங் கூறவோ, அதுசம்பந்தமான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவோ அந்தப் பிரதிநிதிக்கே பாத்தியமுண்டு. ஆனல், இந்தியாவிலுள்ள நாங்கள் இப்பொழுது இங்கே என்ன நடக்கிறதென்பதைக் கொண்டுதான் இனி என்ன நடைபெறப் போகிறதென்பதை ஊகிக்கமுடியும். சென்ற சில நாட்களாக நாட்டின் அரசியல் நிலை அதி வேகமாக மாறிக்கொண்டு வருகிறது. வங்காளம், ஐக்கிய மாகாணம், பஞ்சாப், எல்லைப்புற மாகாணம், சென்னை முதலிய மாகாணங்களில் அடக்குமுறை நாளுக்கு நாள் வலுத்து வருகிறது. இப்பொழுது வங்காளத்தில் சட்ட நீதியாகவே அடக்குமுறை அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அமுலுக்குக் கொண்டுவரப்பட் டிருக்கும் அவசரச்சட்டமோ இந்திய சரித்திரத்திலே இதுகாறும் ஏற்பட்டாதபடி மிகக் கடுமையானதாகும். இதன்படி, சிட்டாகாங்கில் இராணுவச் சட்ட ஆட்சிமுறை அமுலுக்குக் கொண்டுவரப்பட்டிருக்கிறது. இதேமாதிரி எல்லா ஜில்லாக்களிலும் கொண்டுவரப்படுதல் கூடும். போலீசாருக்கும் மாஜிஸ்டிரேட்டுகளுக்கும் இந்தச் சட்டத்தின்படி விசேஷ அதிகாரங்கள் அளிக்கப்பட் டிருக்கின்றன. இந்த அதிகாரங்கள் அளவுக்கு மிஞ்சி உபயோகிக்கப்படும் என்று பழைய சம்பவங்களினுல் நன்கு உறுதியாகிறது. இந்த அடக்குமுறை வலுக்க வலுக்க, அரசாங்கத்தாரின் ஒத்துழைப்பு மனேபாவத்தின் உண்மை புலனுகும்.

### 'அடக்குமுறை வேண்டாம்'

### ஸர் இராதாகிருஷ்ணன் எச்சரிக்கை

இலட்சுமணபுரி சர்வகலாசாலையின் பட்டமளிப்புக் கொண்டாட்டம் 4-12-31-ல் இலட்சுமணபுரியில் நடை பெற்றது. அதுகாலை ஆந்திராசர்வகலாசாலை உதவியட்சகர்ஸர்ஸர்எஸ். இராதா கிருஷ்ணன் நிகழ்த்திய ஒரு சொற்பொழிவில் பின்வருமாறு குறிப்பிட்டார்.—

பிரிட்டிஷ் இராஜ தந்திரிகள், தங்கள் பழையகால ஆட்சி முறையைப் பின்பற்றி பலாத்காரத்தினுல் இனியும் இந்தியாவைஆள முடியாது. நியாயமான அரசியல் அபிலாஷைகளை அடக்குமுறையினுல் ஒழித்துவிட முடியாது. அப்படியே ஜனங்களும் பலாத்காரத்தினுல் தங்கள் இலட்சியத்தை அடைய முடியாது. தன்னுடைய கௌரவத்தையும், தன் மதிப்பையும், சுதந்திரத்தையும் இழவாமல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் இந்தியாஇருக்கக்கூடியவிதமாக, இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் ஒருவித சமரஸம் ஏற்படுமாயின், அதனுல் இந்தியாவுக்குமாத்திரமல்ல உலகத்திற்கே க்ஷேமமுண்டாகும். கிரேட்பிரிட்டனின் நன்மைக்காக, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் இந்தியா இருக்கும்படி செய்தால் அதற்கு இந்தியா ஒருபோதும் சம்மதியாது.

சர்வகட்சி மகாநாட்டில் வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக பிரதம மந்திரி கூறியதை அநுசரித்து, பஞ்சாப் மாகாணத்தில் வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக ஒற்றுமையான முடிவு ஏற்படுத்துவதைப்பற்றி ஆலோசிக்க தனபதி சிகந்தர் ஹைதகான், ஸர் ஜோகேந்திரசிங், மலிக் பிரோஸ்கான் நூன், டாக்டர் கோகுல சந்திர நாரங் ஆகியோர் அடங்கிய ஒருகமிட்டியை நியமிக்கிறதென்றும்இந்தக் கமிட்டியார் தங்களுக்கு வேண்டிய அங்கத்தினர்களைச் சேர்த்துக்கொள்ளலாமென்றும், அடுத்தவருஷ செலவுத்திட்டம் கிளத்தப்படும் சமயத்தில் இக்கமிட்டியார் தங்கள் அறிக்கையைச் சமர்ப்பிக்க வேண்டுமென்றும் பஞ்சாப் சட்டசபையில் 3-12-31ல் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.



## மகேந்திரவர்மன் வடமொழியில் இயற்றிய மத்த விலாசம்

### களிக்கூத்து

(மொழி பெயர்ப்பாசிரியர்: ஸ்ரீமான் தி. கு. கி. நாராயணசாமிநாயுடு)

(மூன்றும் களம் தொடர்ச்சி)

புத்த:—ஓ. அனிச்சம். திக்கம். அனர்த்தம்.

கபா:—பாருங்கள் மாகேஸ்வரர்களே! பாருங்கள்! இப்போலி புத்த சந்நியாசி என் கபாலத்தை எடுத்துக் கொண்டது மல்லாமல் ஓலமும் இடுகிறான். நல்லது, நானும் கூவுகிறேன். ஒரு பிராமணனைக் கொல்லுகிருர்கள்! ஒரு பிராமணனைக் கொல்லுகிருர்கள்!

(ஒரு பாசுபதன் வருகிறன்)

பாசு:— ஐயா! சத்திய சோமரே என் கூச்சலிடுகிறீர்?

கபா:— ஓ! பப்ருகல்பா! இந்த நாக சேனனென்ற திருடன் என் கபாலத்தை எடுத்துக் கொண்டு கொடுக்கமாடேன் என்கிறன்.

பாசு:— (தனக் குள்ளே) நாம் செய்ய நினைக்கும் நியாயம், காத்திருந்தவன் பெண்டாட்டியை நேற்று வந்தவன் கொண்டு போனனென்ற நியாயம் தான். இச் சந்நியாசிக் குடிலன் பசும் புல்லைக்காட்டி பசுவை இழுப்பதுபோல தன்கையில் காசைக்காட்டி எனது மனதிற்கு உகந்தஇவனைக்கவரப்பார்க்கிருன். ஆகையால் நான் இக் கபாலியைத் தூண்டிவிட்டு என் காரியத்தை நிறைவேற்றிக்கொள்கிறேன். (வெளிப்படையாக) நல்லது நாகசேன! இவன் சொல்கிற படிதானு?

புத்த:— என்னையா! நீரும் அப்படிப்பேசுகிறீர்! ஈயாததை எடாதது எங்கள் மதக் கொள்கை. பொய்மையே புகலாதது எங்கள் மதக்கொள்கை. பிரமசர்யம் வழுவாமலிருப்பது எங்கள் மதக்கொள்கை. உயிர் செகுத்துண்ணுதது எங்கள்மதக்கொள்கை. குறித்த காலம் தவறி உண்ணுதது எங்கள் மதக் கொள்கை. ஆகையால் எம்முடைய சமயந்தான் எனக்குப் புகலிடம்.

பாசு:— நல்லது, சத்திய சோமா! அவன் நெறியப்படி இதற்கு நீ என்ன சொல்கிறுய்?

கபா:— எங்கள் நெறி, பொய்மையே புகலக் கூடா தென்பது.

பாசு:— இருவர் சொல்வதும் சரிதான். இதனை எப்படி மத்தியஸ்தம் செய்வது?

புத்த:—புத்த சமயத்தைச்சேர்ந்த எனக்கு இக்கபாலினுடைய கலயம் எதற்காக?

பாசு:— உண்மைதான். ஆனல் அப்பொருள் உனக்கு வேண்டுவதில்லை என்று சொன்னதினுல் நீ எடுக்கவில்லை யென்று எப்படிப் புலனுகிறது?

கபா:—அவன் எடுத்தது வெள்ளிடைமலைபோல யாவர்க்கும் தெரிந்திருக்க, எடுக்கவில்லை யென்று காரணம் காட்டுதல் பயனறது.

பாசு:—நீ வெள்ளிடை மலைபோல் என்று சொன்னதின் கருத்து யாது?

தேவ:—ஐயா! அந்த ஓட்டை அவன் அணியில் மறைத்துவைத்திருக்கான்.

பாசு:—சந்நியாசி கேட்டாயா?

புத்த:—ஓ! ஐயா! இந்த கப்பரை வேறு யாருடையதுமல்ல.

கபா:—அப்படியானல் காண்பிப் பார்ப்போம்.

புத்த:—ஆகட்டும். (கப்பரையைக் காண்பிக்கிருன்)

பாசு:—மாகேஸ்வரர்களே! பாருங்கள்! கபாலி செய்ய நினைத்த தீங்கையும் இச்சந்நியாசியின் செம்மை நெறியையும்!

புத்த:—ஈயாததை எடாதது எங்கள் மதக்கொள்கை. பொய்மையே புகலாதது எங்கள் மதக்கொள்கை. பிரமச் சர்யம் வழுவாமலிருப்பது எங்கள் மதக்கொள்கை. குறித்த காலம் தவறிவுண்ணுதது எங்கள் மதக்கொள்கை. ஆகையால் எம்முடைய சமயந்தான் எனக்குப் புகலிடம்.

(கபாலியும் சந்நியாசியும் கூத்தாடுகிருர்கள்)

புத்த:—சீ! வெட்கமில்லாமல் கூத்தாடுகிருன்.

கபா:—ப்பு! யார் கூத்தாடா? (முற்றும் சுற்றிப்பார்த்து) இந்த சந்நியாசி நான் கூத்தாடுகிறேன் என்று நினைத்துக்கொண்டான்! ஆனல் நான் அல்ல. என்னுடைய ஆனந்தமென்ற மெல்லியகொடி காணமற்போன கபாலத்தைக் கண்டதால் உண்டான உற்சாகமென்ற தென்றலால் அகப்பட்டு இங்குமங்கும் அசைகிறது.

புத்த:—இக்கப்பரையைச்சரியாய்ப்பார்க்க மாட்டேன் என்பதற்குக் காரணம் யாது? ஐயா! பெரிய மனது செய்து இதன் நிறத்தைப் பார்க்கவேண்டும்.

கபாலி:—அதைப்பற்றி நான் என்ன சொல்லக்கிடக்கு? எனக்குக் கண் தெரியவில்லையா? இந்தக் கபாலம் காக்கையிலும் கருமையாயிருக்கிறது.

புத்த:—ஆகையால் இது என்னுடையதுதான் என்று நீயே இப்பொழுது ஒத்துக் கொண்டாய்.

கபாலி:—உண்மைதான்; நீ நிறத்தை மாற்றுவதில் தேர்ந்தவனென்று ஒப்புக் கொண்டேன். இதோ நீ அணிந்திருக்கும் ஆடை, தாமரை நூல்போல் வெள்ளைவெளேரென்றிருந்ததை, வைகறையில் செவ்வான மிட்டதுபோல் சிவக்கச்செய்து விடவில்லையா? மேலும் காஷாயத்தால் உள்ளும் புறமும் மூடியிருக்கும் உன்னை அடைந்த மாத்திரத்தில் அந்தக் கபாலத்தின் நிறம் வேறுவதில் விந்தையென்ன?

தாமரை நூலன்ன தவளவுடை செவ்வான மாமிது போலுள்ளம் அமையுமெனில்—நாமுறுவெண்

சங்கனையகபாலம் தன்னிறந்தான் மாறுவதிசென் புதுமை யேதுமிலையே. [ம்

தேவ:—ஐயோ! ஏழை நான் கெட்டேன். பிரம்மாவுடைகோர்த்தியான கபாலம் சந்திரனைப்போல பளபளப்பும் சதா கள்ளு நாற்றமும் வீசிய எங்க கபாலம் இந்த வீணு போனபையல் தொட்டு இம்மாதிரிபோச்சே.

(இவள் அழுகிருள்)

கபாலி:—இல்லே, என் கண்ணே! அழாதே. அதை மறுபடியும் பரிசுத்தப்படுத்திவிடலாம். தேவர்களும் பிராயச்சித்தத்தினுல் தங்கள் பாபவிமோசனம் ஆகி புனிதராகிருர்களென்று நம் வேதம் கூறும். உதாரணமாக நம் கடவுள், பிறை அணிந்த பெம்மான் நான்முகனின் தலையைக் கிள்ளிவிட்ட பாபமும், தேவர்க்கதிபதியான இந்திரன், துவஷ்டாவின் மகனை விருத்திரனைக் கொன்ற பாவமும் பிராயச்சித்தத்தால் தீரவில்லையா? எ பப்ருகல்பா! அப்படித்தானே?

பாசு:—உன் கூற்று வேதத்திற்கு ஒத்ததே.

புத்த:—நல்லது. நானே நிறத்தை மாற்றி விட்டேனென்று வைத்துக்கொண்டாலும் இக்கப்பரையின் உருவத்தையும் பருமனையும் யார் மாற்றினர்!

கபா:—நீங்களெல்லாம் மாயாதேவியின் வம்சமல்லவா?

புத்த:—உன்னேடு எவ்வளவு நாழி இந்த வழக்கு; இந்தா எடுத்துக்கொள்.

கபா:—இதான் புத்தனுடைய கருணை வெள்ளம்.

புத்த:—இந்த என் பரிதாப நிலையில் எனக்கு யார் துணை?

கபா:—புத்தன்! தர்மம்! சங்கம்! மும் மணிகள்தாம்.

பாசு:—இந்தச் சண்டை என்னுல் தீர்க்க முடியாது. ஆகையால் நாம் நீதி மன்றம் போவோம் வாருங்கள்.

தேவ:—அப்படியானல் ஐயா! அந்தக் கபாலத்திற்கு ஒரு கும்பிடு.

பாசு:—உன் கருத்து என்ன?

தேவ:—ஏ! இந்த மனுஷன்! பள்ளியில் வரும் வரும்படியால் கொழுத்த பணக்காரன். அதைக்கொண்டு நீதிமன்றம் அதிகாரிகளுக்கு வாக்கரிசி போட்டுவிடுவான். நானே பாம்புத் தோலும் சாம்பலுமே அஸ்தியாயுடைய ஓர் ஏழைக் கபாலியின் அடிமை. நான் வழக்குக்குப் போக காசு எங்கே யிருக்கு?

பாசு:—அப்படியல்ல. நம் நீதிபதிகள் கருங்கல் தூண் அனையர். நேர்மையும் நடுநிலைமையும் தூய்மையும் உறுதியும் வாய்ந்த மனத்தினர்; நற்குடிப் பிறந்தோர்.

கபா:—போதும்; போதும். கல்லவன் எதற்கு நாணவேண்டும். போவோம்.

புத்த:—நல்லதய்யா, நீவிர்முன்னேபோம்.

பாசு:—அப்படியே.

மூன்றும் களம் முற்றும்.

### நான்காம் களம்

(எல்லோரும் சென்று விட்டார்கள். பித்தன் வருகிருன்)

பித்தன்:—அதோ! அதோ! அந்தக் கொடிய நாய்! வதக்கின மாமிசம் நிறைந்த ஒரு மண்டை ஓட்டை, எங்கேயோ பொறுக்கிக் கொண்டா ஓடுகிருய்? அதோ பார்! அந்த வோட்டைக் கீழே போட்டுவிட்டு அந் நாய் என்னைத் தின்பதற்காக ஓடி வருகிறது. (சுற்றி முற்றும் பார்க்கிருன்) இந்தக்கல்லால் அவன் பல்லை உடைக்கிறேன் பார். ஆஹா! ஓட்டை போட்டு விட்டு ஓடுகிருயா பைத்தியம் கொள்ளி நாயே! என்தைரியத்தைப் பார்த்து உனக்கு என்மேல் கோபமா? நாட்டுப் பன்றியின் மேல் ஏறி கிட்டு சமுத்திரம் என்ன செஞ்சிதா, மானத்து மேலே குதிச்சி ராவணனை அடிச்சி, தள்ளி, சகரமகன் திமிங்கலத்தைப் பிடிச்சி கிட்டு ஓடியாந்துடேச்சா? ஓ! ஓகோ! ஏ! எருக்கஞ் செடி! நீ என்ன சொல்ரெ? பொய், பொயின்ணு? இந்த உலக்கை கையும் காலுமிருக்கிற தவளை தான் எனக்கு சாக்ஷி. மூன்று லோகத்திலும் என் வல்லமை தெரிஞ்சிருக்கா? எனக்கு சாக்ஷியும் வேணுமா?— அதான் நான் செய்யப் போறேன். அதோ அந்த நாய் தின்னுட்டு மீதி வைச்சிருக்கிற கறி துண்டை நான் திங்க போரேன். (அதைத்தின்று பயந்தவன் போல்கூச்சலிடுகிருன்) ஐயோ! ஐயோ! நான் செத்தேன் 'அழுது செத்தேன்' (அழுது கொண்டே சுற்றி முற்றும் பார்க்கிருன்) நீ யார் என்னை அடிக்கிரே? துஷ்ட பசங்களா! நான் யார் தெரியுமா? கடோத்கஜன். வீமசேனனுக்கு மருமகன் போல நான் ஒருத்தனுக்கு மருமகனில்லையா? கேளுங்க! ஒரு ஆயிரம் பிசாசு கையிலே எச்சி அப்பிகிட்டு என் வயிற்றிலே சவாரி செய்துகிட்டு ஆயிரம் பாம்பும் புலியும் என் வாயிலிருந்து நான் துப்புறேன். ஐயே! என்ன தெந்தரவு? பொருத்துகணும்; பொருத்துகணும். சிறுகன வான்களே! இந்த கறித்துண்டுக்காக என்னைத்தொந்தரவு செய்யாதிங்க. (நீதி மன்றத்திற்குப்போகிறவர்கள் அவ்வழிவருகிருர்கள். அவர்களைக் கண்டு) அதோ! என் ஐயன்! ஞாநந்தி யிருக்கிருன். நான் அவன் கிட்ட போரேன் (ஓடுகிருன்.)

பாசு:—அதோ பாருங்கள்! அந்த பித்தன் இப்பக்கம் ஓடி வருகிருன். அதோ வந்து விட்டான். கந்தலையுங் கிழிச்சலையும் கட்டிக் கொண்டு தலை பிரட்டையா சாம்பலில் புரண்டு உடலில் புழுதி படர, எருக்க மாலை கழுத்தில் புரள, காக்கைக் கூட்டம் புடைசூழ எச்சலைப் பொறுக்கியுண்டு குப்பமேடே நடந்து வந்தது போல் வருகிருன் பாருங்கள்.

பித்த:—நான் அவர்கிட்ட போரேன். (பாசு பதனை சமீபித்து) ஐயா! இந்த ஓட்டை வாங்கிகிட்டு பொறுத்தருளண்ணுஇதைநான் ஒரு பறையனோட கண்ணியமான நாய்கிட்டயிருந்து பிடுங்கிட்டு வந்தேன்.

பாசு:— (பக்கத்திலிருப் போரை ஒரு பார்வை பார்த்து) இதைத் தக்க மனிதரைப் பார்த்து கொடு.

பித்த:— உயர்குல பிராமணனே! இதை வாங்கி கணு.

கபா:— இந்தப் பாசுபதன் தான் இதைப் பெற்றுக் கொள்ளத் தகுந்தவன்.

பித்த:—(கபாலியை அணுகிக்கபாலத்தைத் தரையில் வைத்து அவனை வலம் வந்து அவன்காலில் விழுந்து) பெரியசாமி! இதை வாங்கிகணு. உங்களைக் கும்பிடுகிறேன்.

கபா:— நம் கபாலம்.

தேவ:— ஆமாம்.

கபா:— நம்சிவனருளால் நான் மீண்டும் கபாலியானேன் (அதை எடுக்கப்போகிருன்.)

# மகேந்திரவர்மன் வடமொழியில் இயற்றிய மத்த விலாசம்

களிக்கூத்து

(மொழி பெயர்ப்பாசிரியர் :
ஸ்ரீமான் தி. கு. கி. நாராயணசாமிநாயடு)

## மூன்றும் களம்

(காஞ்சியில் கள்ளுக்கடையின் பக்கம்)

கபா :—ஐயோ ! கபாலத்தை இங்கேயும் காணேமே !

(பரபரப்புடன்)

ஒ ! மாகேஸ்வரர்களே ! என் பிக்ஷா பாத்திரத்தை இங்கே கண்டீர்களா ? அப்பெரியோர்கள் என்ன சொல்லுகிறார்கள் ? “ இல்லே. நாங்கள் பார்க்கவில்லே யென்று ?” ஐயகோ ! நான் கெட்டேன் ; என் அறவும் வீணனது. கபாலமில்லாமல் நான் எப்படி கபாலி ஆவேன். ஒ ! துக்கம் !

ஊறு கள்ளேயு மூனேயு முட்கொள
நாறு தூய்மையில் நல்லுப காரமாய்
தேறு சப்பரை போயது தீர்விலா
தேறு நண்பனி ழந்ததை யொக்குமே. (க)

(தரையில் புரண்டு தலையிலடித்துக் கொண்டு)

பாதகமில்லே. அது ஒரு இலச்சினையே. அதைஇழந்தால் கபாலிகனென்ற பட்டத்தை நான் இழந்து விடவில்லே.

(அவன் எழுகிருன்)

தேவ :—ஐயா ! பின்ன அந்த ஓட்டை யார் எடுத்திருப்பர் ?

கபா :—பெண்ணே ! வதக்கின இறைச்சித்துண்டமொன்று அதிலிருந்தது. ஆகையால் அவ்வோட்டை ஒரு நாயாவது அல்லது புத்த சந்நியாசியாவது எடுத்திருக்கவேண்டும்.

தேவ :—அப்போண்ணு நாம காஞ்சீபுரத்தைத் தெருத்தெருவா சுத்தி அதைத் தேடுவோம் வா.

கபா :—சரி, போவோம். பெண்ணே !

(இருவரும் போகிறார்கள். ஒரு புத்த சந்நியாசி கையில் திருவோட்டுடன் வருகிருன்.)

புத்த :—ஆ ! வணிக குல நாயகன் தனதாசச் செட்டி செய்யும் தர்மத்தை வெல்ல மற்றெவராலும் முடியாது. இதோ ! என் கையிலிருக்கும் பலவகை மீனும் இறைச்சியும் நிறைந்து பார்ப்பதற்கும், நுகர்வதற்கும், சுவைப்பதற்கும் ருசிகரமான சோறு அவன் கொடுத்ததே. நாம் இப்பொழுது நம் பள்ளிக்குப் போவோம்.

(உலாவிக்கொண்டு தனக்குள்ளே)

ஹா ! நம்பெரும் கருணைக் கடலாம் இறைவன் - புத்தன், சங்கத்தை வகுத்து, அதன் அங்கத்தினராகிய சந்நியாசிகள் மாடமாளிகையில் வசிக்கலாமென்றும், பஞ்சுமெத்தையில் துஞ்சலாமென்றும் முற்பகலில் வயிறார வுண்ணலாமென்றும், பிற்பகலில் மணங்கமழும் பானவகைகளை அருந்தலாமென்றும், பஞ்ச வாசனை நிறைந்த தாம்பூலம் தரிக்கலாமென்றும், மெத்தென்ற வுடைகளை அணியலாமென்றும் விதித்து, அவன் சிற்றின்பத்தையும் மதுபானத்தையும் மாத்திரம் ஏன் விலக்குவானேன் ? இல்லே ! எல்லாம் அறிந்தவனுயிற்றே ; இதை மாத்திரம் எப்படி மறந்திருக்க முடியும் ? நான் நினைக்கிறேன், அந்த ஊக்கம் குன்றி உடல் உலர்ந்து வஞ்சக நெஞ்சத்தராம் கிழபுத்த சந்நியாசிகள் என்னேப்போல் இளமையும் வனப்பும் வாய்ந்த சந்நியாசிகளின் மேலுள்ள பொறாமையினுல் பெண்ணேயும் குடியையும் குறித்த விதிகளே நம் திரிபிடக புத்தகத்திலிருந்து அழித்திருக்கவேண்டும். இதைப்பற்றி ஐயப்பாடே இல்லே. இத்திரிபிடகத்திற்கு மூலமெங்குளதோ ? அது கிடைத்தால் புத்தனின் உண்மைப் போதனையை உலகிற்குக் காட்டி என் போன்ற இளைய சந்நியாசிகளுக்கும் இன்பத்தை அளிப்பேன்.

(உலாவுகிருன்.)

தேவ :—பார் ஐயா ! பார் ! அதோ அந்த காவி வேட்டி போத்திகிட்ட பையல் பார்! அவன் கைகால் முடக்கி கிட்டு கள்ளன் மாதிரி இப்படியும் அப்படியும் பாத்து கிட்டு பூனேமாதிரி பையப்பையக் காலே எடுத்து வச்சிகிட்டு போரான் பாத்தியா ?

கபா :— ஆம் பெண்ணே ! சரிதான். அதோடுகூட அவன் கையில் எதையோ மேலாடையால் மறைத்துச் செல்கிருன்.

தேவ :—அப்படிணு, அவனேப் பிடிச்சி அது என்னுணு பாக்கலாம்.

கபா :—அப்படியே செய்வோம் பெண்ணே !

(முன்னுல் வந்துகொண்டே)

ஒ ! சந்நியாசி ! நில் !

புத்த :—யார் என்னே இம்மாதிரி விளிப்பது ? யாராயிருக்கலாம். (நின்று திரும்பிப் பார்த்து) ஒ ! அவன் ஏகம்பத்தில் வசிக்கும் போக்கிரி கபாலி அல்லவா? நல்லது, அவன் குடிவெறிக்கு நான் உட்படமாட்டேன்.

(ஓடப்பார்க்கிருன்)

கபா :—அகப்பட்டுவிட்டது; என் கபாலம் அகப்பட்டுவிட்டது ! என்னேக் கண்டவுடன் அவன் மிரண்டு ஓடுவதே அவன் திருடன் என்பதற்குப் போதியசான்று.

(முன்னுல் ஓடி வழிமறைத்து)

அடே ! அயோக்கியா ! இப்பொழுது எங்கே போவாய் ?

புத்த :—இல்லே ! நண்ப ! கபாலி ! நீ அப்படிப் பேசுதல் அடாது. (ஈதென்ன ?) என் அழகிய நங்காய் !

(தனியாக)

கபா :—ஒ ! சந்நியாசி ! அதென்ன காண்பி பார்ப்போம் ? உன் கையில் என்ன இருக்கிறதென்று நான் அறியவேண்டும்.

புத்த :—அதில் என்ன இருக்கு பார்ப்பதற்கு ? கேவலம் ஒரு திருவோடு.

கபா :—அதைத்தான் நான் பார்க்கவேண்டுமென்கிறேன்.

புத்த :—இல்லே நண்ப ! அப்படிச் சொல்லாதே. நாங்கள் அதை மூடித்தான் கொண்டு போகவேண்டும். அதுவும் உனக்குத் தெரிந்தது தானே.

கபா :—ஆமாம் உண்மைதான். இந்த மாதிரிப் பொருள்களே ஒளித்துக்கொண்டு போவதற்காகத்தானே உங்கள் புத்தன் உங்களே நீண்ட உடையைத் தரிக்க விதித்திருக்கிறுன்.

புத்த :—அது வுண்மைதான்.

கபா :—அது பாதி வுண்மை. ஆனல் எனக்கு முழுவுண்மையும் தெரியவேண்டும்.

புத்த :—சரி. சரி ; போதும் உன்கேலி. பிச்சைப்பொழுது போகிறது. நான் செல்லவேண்டும்.

(பக்கலில் நகருகிருன்)

கபா :—அடே ! போக்கிரி ! எங்கு போவாய்? என் கபாலத்தைக்கொடுத்து விட்டுப் போ.

(அவன் உடையைப் பிடித்து இழுக்கிருன்.)

புத்த :—புத்தனே ! போற்றுவோம் !

கபா :—கபடனேப் போற்று என்று சொல் ! அவன்தானே, களவு நூல் இயற்றியவன். ஆனல் புத்தன் அவனுக்கு அப்பன்.

அந்தணர்கள் கண்கள் அயர்ந்திருந்த சாலே [யினில்
தந்திரமாய்ப் புத்தன் சாக்கறையை—முந்தி
உபநிடத பாரதத்தினெண் பொருள்கள்
அபகரித்து வைத்தான் அறி. [வெளவி

புத்த ,—பாபம் சாந்தி ! பாபம் சாந்தி !

கபா :—இந்தத் தூய்மையான துறவிக்கு எந்த பாபம்தான் சாந்தியாகாது.

தேவ :—ஐயா ! நீங்க நினைத்ததுபோல தெரியுது. அந்த மண்டை ஓடு லேசா கிடப்பதா தோணலெ. இந்தக் கொம்பிலெ இருக்கிற கள்ளே குடிச்சு கொஞ்ச திடப் படுத்திக்கிட்டு அவங்ககூட சண்டைபோடுங்க.

கபா :—அப்படியே (தேவசோமாகள்ளேக் கொடுக்கக் கபாலி வாங்கியுண்கிருன்) பெண்ணே ! நீயும் கொஞ்சம் சாப்பிடு, அவண்டு போயிருக்கிருய்.

தேவ :—ஐயா ! உங்க சித்தம். (அவளும் குடிக்கிருள்)

கபா :—இந்தப் பயல் நம் துரோகிதான். இருப்பினும் எதையும் எல்லோரோடும் பகிர்ந்து வுண்ண வேண்டுமென்பது நம் மதக்கொள்கை. ஆகையால் எஞ்சியிருப்பதை அத்துறவிக்கும் கொஞ்சம் கொடு.

தேவ :—ஐயா ! உங்க உத்தரவு. (புத்த சந்நியாசியைப் பார்த்து) இந்தாங்கோ ஐயா!

புத்த (தனக்குள்ளே) என்ன அதிர்ஷ்டம், ஆனல் யாரேனும் பார்த்துவிடுவார்களென்ற ஒரு பயம்தான். (அவளேப் பார்த்து) இல்லே அம்மா ! அப்படிச் செல்லாதே. அது என் போன்றவர்க்குத் தகுதியல்ல. (வாயைச் சப்புகொட்டுகிருன்.)

தேவ :—போ ! தொலே ! இந்த மாதிரி அதிர்ஷ்டம் உனக்கு எங்கே கிடைக்கப் போவது ?

கபா :—பெண்ணே ! அவன் நாவில் நீர் சொட்டுகிறது ; அதனுல் சொல் குளறுகிறது.

புத்த :—இன்னும் உங்களுக்கு என்மீது இரக்கமில்லேயா ?

கபா :—இரக்கமிருந்தால் நான் எப்படி முற்றும் துறந்த முனிவனுவேன்.

புத்த :—அப்படியானுல் முற்றும் துறந்த முனிவர்க்கு முனிவு ஏன் ?

கபா :—என் பொருளேக் கொடுத்துவிட்டால் எனக்கு உன்மேல் முனிவென்ன ?

புத்த :—உன் பொருள் எது ?

கபா :—கபாலம்.

புத்த :—என்ன ! கபாலமா ?

கபா :—‘என்ன ! கபாலமா?’ என்று கேட்கிருன். இம். இதில் வியப்பென்ன ? இந்த உலகமே பொய்யென்ற புத்தன் புதல்வன் நீ. அவன் கடல், மலே, ஆறு இவ்லாவற்றையும் மறைத்திருக்க உனக்கு இந்தச் சிறிய கபாலத்தை மறைப்பதற்கு முடியாதாயென்ன ?

நிலேகொள் பூதங்கள் நிற்பன யாவையும்
மலேவு தென மறுத்திடும் புத்தனூர்
நிலவு மைந்த னெனப்படு நீபலிச்
சலம மறைத்துக் கழறல் அரியதோ ?

தேவ :—ஐயா! மயிலே மயிலேன்ன இறகு போடாது. அவங்கிட்டெருந்து வெடுக்குனு பிடிங்கிக்குங்க.

கபா:—பெண்ணே! அதுதான் சரி. அப்படியே செய்கிறேன்.

(அவன் கையிலிருந்து ஓட்டைப் பறிக்கப் பார்க்கிருன்.)

புத்த :—போடா ! போக்கிரி கபாலி ! (அவன் கையை உதறிவிட்டு அவனே உதைக்கிருன்.)

கபா:—நான் எப்படி விழுந்தேன்!

தேவ:—டே! நீ செத்தெ (சந்நியாசியின் தலையைப் பற்றி இழுக்க எத்தனிக்க மொட்டைத் தலே கையில் பிடிபடாமல் கீழே விழுகிருன்.)

புத்த :—(தனக்குள்ளே) தலையை மொட்டை அடிக்கச் சொன்ன புத்தன் திரிகால ஞானி ! (உரக்க) அம்மா ! எழுந்திரு அம்மா! எழுந்திரு (தேவசோமியைக் கைக்கொடுத்துத் தூக்கி விடுகிருன்.)

கபா :—பாருங்கள் மாகேஸ்வரர்களே ! பாருங்கள் ! இந்நாகசேனன் என்றபோலிச் சந்நியாசி என் நங்கையைப் பாணிக்கிரகணம் செய்கிருன்.

புத்த :—நீ அப்படிச் சொல்லாதே. துன்பத்தில் விழுந்தோரைக் கை தூக்கி விடுவது எங்கள் மதக் கொள்கை.

கபா :—இதுதான் உங்கள் வாலறிவனும் புத்தனுடைய மதமோ ? நான் முன்னே விழவில்லேயா? பரவாயில்லே. இப்பொழுது உன் மண்டையோடு என் திருவோடு ஆகப் போகிறது பார். (எழுந்து சண்டை இடுகிருன்.)

(தொடரும்)

# கந்தர் அநுபூதி

## மறைபொருள் விளக்க உரை

சென்னை, இராயப்பேட்டை 'வேத ப்ரவசன மந்திரத்து' ஸ்ரீமத் சிவத்தியானந்த மஹரிஷி எழுதியது :—

### தற்சோரூபம் காண

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிரிவொன் றறநின்ற பிரான் அலையோ?
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும் வேலவனே. 48

### அந்வயம்

செறிவு ஒன்று அற வந்து, இருள் (ஏ) சிதைய, வெறி வென்றவரோடு உறும் வேல் அவனே! அறிவு ஒன்று அற நின்று அறிவார் (அது) அறிவில் பிரிவு ஒன்று அற நின்ற பிரான் (நீ) அலையோ?

[பிரிவு-ஒலி யெதுகையாக வந்ததென வுணர்க. இது ஆங்கிலத்தில் (Priner's Rhyme) என்பது போன்றது.]

### பொழிப்புரை

தலைப்பு:—[உபாஸனை செய்யப் புகுந்தவர் உபாஸ்யமாகிய தெய்வம் தனது ஆத்ம ஸ்வரூபமே என்பதை யுணரும் அத்வைத நிலையைக் காட்டுவதானதுபற்றி இம்மறைக்குத் 'தற்சொரூபங்காண' எனத் தலைப்புப் பெய்தார்.] தனது ஸ்வரூபமே பரப்பிரஹ்ம ஸ்வரூபமென்பதை அநுபூதி நிலையிற் காண.

செய்யுள்—ஒருவிதமான உலகப்பற்றும் பக்தர்களைப் பற்றிக்கொள்ளாதபடி எதிர்ப்பட்டுத் தரிசனமளித்து, (அப்படி உன்னைக் காணப் பெற்றாரது) அஞ்ஞான இருளானது சிதறியோடும் வண்ணம், தங்களது உலக மயக்கத்தை ஜயித்தவர்களோடு (ஸதா, கூடி யிருக்கின்ற வேலாயுதக் கடவுளே! ஞானமென்னும் முப்பொருளிலொன்று தெரியாதபடி நின்று, அருளே யுணர்த்த அநுபூதியினால் அறிவார்களது அறிவினுள்ளே பிரிவென்ற ஒன்று (என்றும்) இல்லாமற் போகுமாறு நின்று (அவர்களுக்கு) அருளையூட்டும் பிரான் நீ அல்லவா? (அதனால் உபாஸகனே உபாஸ்யனாய் உபாஸ்யன் உபாஸகனுக்குள் விளங்கும் எனது சொரூபத்தை யான் இன்று அறிந்தேன் என்று கூறியபடி.)

### விசேஷக் குறிப்புகள்

அத்வைத நிலையைக் கைவல்யமாகப் பெற இரண்டு நெறி யுலகத்தில் கையாளப் பெற்று வருகின்றன: ஒன்று குருசிட்டபாவசிச்ருஷை; மற்றொன்று உபாஸனை. இவ்விரண்டனுள் சிறந்தது உபாஸனையே என்பது அறிவாளிகளின் துணிவான கொள்கை. இதுவே அருணகிரிநாதரின் மதமென்பதை 'ஒழுக்குப் பேச' என்னும் 30-வது மறையின்கண் விளக்கியுள்ளேன். இக்கொள்கையை வற்புறுத்தவே இம்மறையிலும் அத்வைத ஸ்வாநுபூதியைத் தெளிவுபடுத்த உபாஸனை முறையை விளக்கினார். இதனையே "எப்படியும், தேரிற் றவித்தம் சிவாகமமே சொல்லு நிஷ்டை, யாருமிடத் தத்துவிதமாம்." என்று தாயுமானார்வற்புறுத்தியுள்ளாரென்க. இவ்வுபாஸனை நிஷ்டையான முறையை அம்மறைக்கண் தெளிவுபடுத்தினார் இந்நூலாசிரியர். அருள் தாகம் வாய்ந்த ஒருவன் ஞானநூல்களைக் கற்கிறான். கைவல்யம் போன்ற ஞானநூல்களைக் கற்றபோது நித்தியா நித்திய வஸ்துக்களின் விவேகம் ஒருவனுக்கு ஏற்படுகிறது. எனினும் மனமானது சலனமற்று நிற்பதில்லை. அம்மனச் சலனம் அறுவதற்குக் குருவாகிய ஒரு மனிதரூப ஞானியைப்பற்றி நிற்கப்பார்க்கிறான். அப்படிப் பார்த்துச் சில நாள் அந்நெறியில் ஒழுகின பின்னர் அத்நூல குருவும் தன்னைப்போலக் கால பத்தனாய் தேகபத்தனாய்ப் பலவிதக் கட்டுப்பாடுகளுக்குள்ளும் நின்று அவற்றினின்றும் விலக முடியாதவனாய்த் தனது நடத்தைக்கு ஒப்புரவு, ஆசாரம், ஒழுக்கம் முதலிய பல போலிப்பெயர்களையிட்டு நடப்பதைக் கண்டு, அத்நூலகுரு தனது மேல்நிலையை யனுபவிப்பதற்குப் பயன் படுவதில்லை யென்பதை யுணர்ந்து, தனது மனச் சலனத்தை மாற்ற உபாஸனையாகிய மற்றொருவழியில் நடக்கத் தொடங்குகிறான். உடனே சின்மயானந்த குருவாக நிர்கவல்ல உபாஸ்யதேவதைகளிற் சிறந்த தெய்வத்தைத் தன் மனதில் ஆராயத் தொடங்குகிறான். அதுவே ஸமயமென எங்கும் நிறைந்து நிற்கும் பொருளாகிய அத்தெய்வம் வலிய வந்து இவனது மனதைப் பற்றிக் கொள்கிறது. அப்படிப் பற்றிக் கொள்ளவே, அதற்குள் தானாய் தனக்குள் அதுவாய் நிற்கும் நிஷ்டை உபாஸனுக்கு கைகூடுகிறது. அப்பொழுது அவன் தன் உண்மை ஸ்வரூபத்தைக் காண்கிறான். இவ்வுண்மையை இம் மறையில் நன்கு அறிவிக்க வந்தவர், வெறி வெல்லுதற்குச் செறிவு (பந்தம்) ஒன்றும் இருக்கப் படாதென்பதை உபாஸனுக்கு எடுத்துக் காட்டுதற்கு முருகன் எதிர்வந்து நிற்கிறானென்பதை விளக்கச் 'செறிவு ஒன்று அறவந்து' என்றும், உலகச் செறிவு அற்றதும் அறிவின்மை ஒழியவும், உபாஸ்ய தெய்வத்தினிடத்துப் பற்று உறவும் உதவியேற்படுகிறதென்பதைக் காட்ட 'இருளே சிதைய' என்றும், அப்படி உபாஸனை வித்திபெற்றவர் ஸ்திரமாக மயக்கங்களை ஒழித்து நிற்க வல்லவராகிறாரென்பதை வெளிப்படுத்த 'வெறி வென்றவர்' என்றும், அவரும் தானும் ஏகீபாவப்பட்டு, 'எனக்குள்ளே நீயிருக்க உனக்குள்ளே நானிருக்க மனக்கவலை தீர வரமருள்வாய் பூரணமே' என்றபடி, சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந் தொன்றும் அத்வைத நிலையை யநுபவிக்கிறானென்பதைத் தெரிவிக்க, 'வென்றவரோடுறும் வேலவனே' என்றும் கூறினார். மேலும் அப்பிரானோடு தாம் அநுபவித்த ஆநந்த நெறியை விளக்க வந்தவர், ஞாதரு ஞானம் ஞேயம் என்னும் மூன்றி லொன்றான ஞானம் என்னும் நிலை ஒன்று இருப்பதையே மறந்து, பக்திபாவசத்தில் உபாஸகன் நிற்கிறான் என்பதைக் காட்ட 'அறிவொன்ற அறநின்று' என்றும், அந்நிலையிலும் ஈசுவர சைதன்யம் ஒழுகும் நெறி காணப்படுவதால் அப்படிக் காணப்படுவது அருளாலென்பதைத் தோற்றுவிக்க 'அறிவொன்றற நின்றறிவார் அறிவில்' என்றும் அவ்வருள் தோன்றிய பின்னர் ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் பிரிவில்லாமற் போகிறதென்பதைத் தோற்றுவிக்கப் 'பிரிவொன்றற நின்றபிரா'னென்றும் கூறினார். இவ்வத்துவித வேதாந்த உண்மையேவேதக் கொள்கை என்பது மேல் 47-ம் செய்யுளின் விசேஷக் குறிப்பில் காட்டப் பெற்றது. இதுவே ஆகமத்துணிபும் என்பதையே இம் மறையாசிரியரும் பல விடங்களில் விளக்கியுள்ளாரென அறிக.

# திருக்குறள் புதிய பொழிப்புரை

திருக்குறளை அனைவரும் படித்து இன்புறும் நோக்கத்தோடு பரிமேலழகர் உரையைத் தழுவிய பொழிப்புரை யொன்று எழுதி உயர்ந்த தாளில் குறைந்த விலையில் அச்சுப் பிழையின்றி டபுள் கிரௌன் 16 பக்க அளவில் சுமார் 280 பக்கங்கொண்ட புத்தகமாக அழகிய முறையில் அச்சிட்டு வருகிறோம். இது பிப்ரவரி மாதம் முதல் தேதிக்குள் வெளிவரும். ஐம்பது பிரதிகட்குக் குறையாமல் முன்பணம் அனுப்புவோர்க்கு மட்டும் பிரதி ஒன்று ஆறு அணாவாகவும் மற்றவர்க்கு எட்டணாவாகவும் கொடுக்கப்படும். முன்பணம் அனுப்புவோர் கீழ்க்கண்ட விலாசங்களுள் எந்த விலாசத்திற்கேனும் அனுப்பலாம். தபால் செலவு பிரத்தியேகம்.

விலாசம் :—

1. கு. ப. குருசாமி நாடார்,
அறுபத்துமூவர் குருபூஜா மடம், விருதுநகர்.

2. தி. இரா. வேலாயுத பாண்டியர்,
ஸ்ரீ சிவசுந்தர விநாயக தேவார பாராயண பக்தஜன சபை,
ஆண்டியப்ப முதலி வீதி,
இராயபுரம் P.O., சென்னை.



# மநுநீதி சதகம்

கிரவுன் 16 பக்க அளவில் உயர்ந்த கிளேஸ் கடிதத்தில், நேர்த்தியாக அச்சிடப்பட்டு உன்னத பயிண்டு செய்யப்பட்டுள்ளது. பிரதி 1-க்கு விலை அணா 8. வெகு நயம். தபாற் கூலி வேறு.

இந்நூலில் அரசர் குடிகளிடத்து நடந்து கொள்ளும் முறையும், குடிகள் அரசரிடத்து நடந்துகொள்ள வேண்டிய முறையும், குற்றங்களை விசாரிக்குந் தன்மையும், சாக்ஷிகள் நிர்ப்பக்ஷபாதமாய்ச் சொல்ல வேண்டிய பகுதியும், மனைவி புருஷனிடத்தும், புருஷன் மனைவியிடத்தும் ஒழுக வேண்டிய விதிகள், கற்புள்ள மங்கையர் சிறப்பு, கற்பிலா மங்கையை நீக்க வேண்டிய விதானம், கூட்டு வியாபாரத்தின் ஒழுக்கங்கள், அடிமையைக் கொள்ளுதலும் விலக்குதலும், அதனாலாய நன்மை தீமைகள், நிலங்களைப் பெறுதல், பிதா, புத்திரர், பௌத்திரர், ஒருவர்க்கொருவர் கொள்ள வேண்டிய அன்பு, குடும்ப பாகப் பிரிவினை விதானம் முதலிய நீதி விஷயங்களும் விவகார விஷயங்களும் இனிய தமிழ்ச் செய்யுட்களாக அமைக்கப்பட்டுள்ளதை ஒவ்வொரு அன்பரும் வாங்கி வாசித்து உண்மை தெளிய வேண்டுவது விவேகிகளது கடமையாகும்.

## நீதிநெறி விளக்க மூலம்

இந்நூல் பதவுரை, தொகுத்துரை, விருத்தியுரை, ஆங்கில மொழிபெயர்ப்பு முதலியன அடங்கியது. இந்நூல் திருக்குறளின் சாரமா யிருப்பது கருதி, ஒவ்வொரு செய்யுளுக்கும் அதன் கருத்தமைந்த திருக்குறள் மூலமும், பரிமேலழகர் உரையுடன், ஒவ்வொரு செய்யுளுக்கும் புதிதாக எழுதப் பெற்ற விஷயத் தலைப்புகள், வினையுருபுகள், வெண்பா என்கிற இரு விஷயங்கள், நூலாசிரியர் சரித்திரம், நூலின் பெயரிலக்கணம் முதலியனவும் அடங்கியுள்ளன. புதிய பதிப்பு. விலை ரூபா 1-8-0. தபாற்கூலி வேறு. பெதர்வெயிட் காகிதப் பதிப்பின் விலை ரூபா 2-8-0.

## ஸங்கீத கீர்த்தன சுரஞான விளக்கம்

(சுர, ராக, தாள, விசேஷக் குறிப்புகளுடன் கூடியது)

"ஸங்கீத வித்தையானது லக்ஷ்யக்ஞானம்; லக்ஷணக்ஞான மென்பதாக இருவகைப்படும். லக்ஷ்யக்ஞானமாவது, கேள்வியின் பேரிலேயே ராகாலாபன் முதலியவைகளைத் தெரிந்து கொள்வது. லக்ஷணக்ஞானமாவது, சாஸ்திர மரியாதையை மீறாமல் லக்ஷ்யக்ஞானத்தை உபயோகப் படுத்துவது. இப் புத்தகத்தில் மிகப் பிரசித்திபெற்ற வித்வான்களான ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் அருளியகீர்த்தனங்களும், பட்டணம் ஸ்ரீ சுப்ரமண்ய அய்யரவர்களுடைய பல கீர்த்தனங்களும் ஸ்வரப்படுத்தி அச்சிடப்பட்டிருப்பதால் சொற்ப லக்ஷ்ய லக்ஷணம் ஞானமுள்ளவர்களும் தாமாகவே சங்கீதக் கருவிகளிலும் வாய்ப்பாட்டு முதலியவைகளிலும் இவைகளை உபயோகிக்க இந்நூலை வழியாகக் கொள்ளலாம். இப்புத்தகத்தில் மற்றும் சில சில்லரைப் பாடல்களும் ஸ்வரப்படுத்தி அச்சிடப்பட்டிருக்கின்றன. உயர்ந்த காகிதத்தில் அச்சிடப்பட்டது. விலை ரூபா 1-4-0.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| நீதிவாக்கிய மஞ்சரி 208 | ... | 0 | 4 |
| தியாகராஜகீர்த்தனை (சங்கீதாமிருதக் கீர்த்தனை) | ... | 1 | 4 |
| ஷெ தெலுங்கு பதிப்பு | ... | 1 | 4 |
| ஹிந்திய சங்கீதக் கீர்த்தனைப் பாட்டுகள் 320 | ... | 1 | 8 |
| ஆனந்தராமாயணம் வசனம் 14 படங்களுடன் 9 காண்டம் | ... | 6 | 0 |
| சுயமரியாதைக் கண்டனத் திரட்டு நால்வர் திருவுருவப் படத்துடன். | | 0 | 8 |
| மாதர் நீதி வசனம் 3 பர்வம் புதிய பதிப்பு | ... | 1 | 0 |
| அகஸ்தியர் ரண வைத்தியம் 136 முறைகள் | ... | 0 | 12 |
| அகஸ்தியர் நயன விதி 500 உரையும் நாகமுனிவர் 200 | ... | 1 | 4 |
| இராமதீர்த்த பரமஹம்ஸ விஜயம் வசனம் 1-2 பாகங்கள் | ... | 5 | 0 |
| விவேகானந்தர் கர்மபக்தி ராஜஞான யோகங்கள் 4-ம் | ... | 8 | 4 |
| மோக்ஷ சாதன ரஹஸ்யம் (யோக வசனம்) | ... | 4 | 0 |
| சச்சிதானந்த சிவம் குருசிஷ்ய சம்பாஷணை | ... | 1 | 2 |

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

சகம் - 1854, கலி - 5033, ஆங்கிலம் - 1931, பிரஜோத்பத்தி வருஷம் கார்த்திகை மார்கழி பஞ்சாங்கம்

| தேதி | டிசம்பர்மீ | கார்த்திகைமீ | வாரம் | திதி | நா. வி. | நக்ஷத்திரம் | நா. வி. | யோகம் | நா. வி. | கரணம் | நா. வி. | தியாஜ்யம் | நா. வி. | அமிர்தாதி யோகம் | நா. வி. | | லக்னம் | வார சூலை | விசேஷதினம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 22 | 3 | 18 | வியா | அஷ்ட | 2 10 | பூர | 17 46 | விஷ்க | 15 31 | கௌல | 2 10 | ,, | 6 10 | சி | 17 46 | அ | அ—தி | தெற் | வியதீபாதயோகம் செய்ய. |
| 23 | 4 | 19 | வெள் | நவ | 56 42 50 49 | உத் | 13 51 | ப்ரீ | 7 49 | தைதி | 26 21 28 46 | ,, | 5 18 | சி | 18 51 | அ | தெ—மே | மேற் | ஸ்ரீ வஸிஷ்டீயம் பஜன வார உற்சவம். |
| 24 | 5 | 20 | சனி | தச | 42 2 | அஸ் | 9 46 | ஆயு | 59 38 | பவ | 16 26 | ,, | 0 52 | ம | 60 0 | ... | மே—வா | | |
| 25 | 6 | 21 | ஞாயி | ஏகா | 39 38 | சித் | 5 43 | ஸௌ | 52 8 | கௌல | 10 49 | இலி | 18 51 | சி | 60 0 | ... | வா—ரி | இழ மேற் | திருச்சானூர் அலமேலுமங்கைத் தாயார் திருநாள் வாரம். [அம்மை உற்சவம். |
| 26 | 7 | 22 | திங் | துவா | 34 0 | ஸ்வா | 1 48 | | 44 84 | | | இலி | 14 36 | அ | 2 0 | ம | ரி—ஆ | இழ | பிரதோஷம். |
| 27 | 8 | 23 | செவ் | திர | 29 10 | விசா | 58 40 55 26 | அதி | 37 9 | கர | 1 35 | இலி | 6 20 | சி | 60 0 | ... | ஆ—பூ | வட | சிப்பிகள் வாசக்கால் வைக்க. |
| 28 | 9 | 24 | புதன் | சது அமா | 25 4 | அனு கேட். | 58 23 | [illegible] | 30 12 23 46 | பத் சகு | 25 4 | இலி | 8 48 | சி | 58 28 | ம | பூ—இ | வட | அமாவாசை விரதம். |

| சூ | | | |
|---|---|---|---|
| | | | |
| | | | குரு |
| சனி செ·சுக் | சூ·பு | | கேது |

### கிரக பாத சாரங்கள்

சூரியன்.—21உ 0- 8க்கு கேட்டை 2-ல்.
24உ 17- 1க்கு ,, 3-ல்.
குஜ.— 18உ 34- 3க்கு மூலம் 2-ல்.
22உ 50-46க்கு ,, 3-ல்.
புதன்.— 20உ 44- 0க்கு மே. வ. அத்.
23உ 14-32க்கு வ. கேட். 3-ல்.
குரு.— சிங்கம் மகம் 1-ல்.
சுக்.— 20உ 18- 2க்கு மூலம் 4-ல்.
22உ 50-16க்கு பூராடம் 1-ல்.
சனி.— தனுசு ,, 2-ல்.
ராகு.— மீனம் உத்திரட்டாதி 2-ல்.
கேது.— கன்னி உத்திரம் 4-ல்.

பாலகணிதர்,
அ. பே. முத்து ஜோதிடர்,
281, ஐரோட், திருவல்லிக்கேணி, சென்னை.

